# "அலையும் துறவி" கண்காட்சி விளக்கம்

(கன்னியாகுமரியில் ஒரு நிரந்தரக் கண்காட்சி —
அலையும் துறவி சுவாமி விவேகானந்தர் பற்றி)



**விவேகானந்த கேந்திரம்**
விவேகானந்தபுரம்
கன்னியாகுமரி - 629 702
தமிழ்நாடு

முதல் பதிப்பு — 1992

பதிப்பாளர் :

விவேகானந்த கேந்திரம்
விவேகானந்தபுரம்
கன்னியாகுமரி - 629 702
தமிழ்நாடு



பிரச்சார விலை ரூ 5/-

அச்சிட்டோர் :

விவேகானந்த கேந்திர அச்சுப்பள்ளி
விவேகானந்தபுரம்
கனனியாகுமரி - 629 702.

# பணிவுரை

கன்னியாகுமரியில் ''அலையும் துறவி'' (Wandering Monk) என்ற பெயரில், ஒரு அழகான நிரந்தரக் கண்காட்சியை விவேகானந்த கேந்திரம் நிறுவியுள்ளது. அதில், 41 காட்சிமேடைகள் அமைக்கப் பட்டு, சுவாமி விவேகானந்தர் பாரதநாட்டை வலம் வந்தபோது பெற்ற அனுபவங்கள் குறிப்பிடப் பட்டுள்ளன. அந்தக் கண்காட்சி விளக்கத்தை இச்சிறு நூலில் வெளியிடுகிறோம்.

இப்படிக்கு
இறைவன் பணியில்
விவேகானந்த கேந்திரம்

## முன்னுரை:

ஸ்ரீராமகிருஷ்ணரின் மகாசமாதிக்குப் பின் சில வருடங்கள் கழித்து நரேந்திரநாத் தத்தா (பிறகு இவர் சுவாமி விவேகானந்தர் என்று புகழ் பெற்றார்) தன்னுடன் பிறந்த ஆன்மீக அவா, கேள்வி கேட்கும் சுபாவம் இவற்றை ஒன்றறக் கலக்கும் கடினமான பணியை எதிர்நோக்கினார்.

இந்தத் தேட்டத்தில் இன்னும் அதிக உற்சாகம் பெற அவர் விரும்பினார். இதற்காக அவர் பாரத தேசம் முழுவதும் சுற்றி அலைந்தார். அப்போது அவர் யாரும் அறியாத் துறவியாகத்தான் இருந்தார். பாரத மக்களின் இதயத்தில் நம்பிக்கைச் சுடர் அணையாமல் ஜொலிப்பதை சுவாமிஜி தரிசித்தார். பாரத சமுதாயத்தில் மேல் ஓடாக தரித்திரப் பேய் சூழ்ந்திருந்தது. ஆழத்திலோ ஆன்மீக உத்வேகமும், ஞானமும், புத்துணர்வும் பாரத மனங்களின் மொத்த உருவமாக ஒளிர்ந்தன; இவற்றுடன் சுவாமி விவேகானந்தர் தன்னை ஒன்றாக உணர்ந்தார். இறுதியில் அவர் கன்னியாகுமரி வந்தடைந்தார். அங்கு அவர் தன் வாழ்க்கையின் லட்சியப்பணி என்னவென்று அடையாளம் கண்டு கொண்டார். ''தியாகமும் சேவையும்'' என்று அவர் அதனைச் சுருக்கமாக வர்ணித்தார்.

## அலையும் துறவி

சுவாமி விவேகானந்தரை அறிவதென்பது பாரதத்தையே புரிந்து கொள்வதற்கு சமமாகும். கன்னியாகுமரியில் அமைக்கப்பட்டுள்ள இந்த நிரந்தரக் கண்காட்சி, அலையும் துறவியாக அவர் செய்த புனிதப் பயணத்தின் தாக்கத்தைப் படம்பிடித்துக் காட்டுகின்றது. வரும் தலைமுறைகட்குத் தெய்வீகப் புத்துணர்வூட்ட இது சக்திவாய்ந்த ஒரு கருவியாக இருக்கும். சுவாமிஜியின் பயணம் ஆன்மீக ஞானத்தைத் தேடியது. மெள்ள மெள்ள ஆன்மீக விழிப்புணர்வு பெற்ற கதை அது. இதற்கென அவர் மிக மகத்தான இடங்களைச் சென்று பார்த்தார்; மகத்துவம் பொருந்திய மனிதர்களை அவர் சந்தித்தார். அவர் பயணம் செய்த காலமோவெனில் முக்கியமான மாறுதல்கள் நடைபெற்றுக் கொண்டிருந்த காலம். இவை எல்லாம் சேர்ந்து மனித குலத்தின்மீது அவருடைய பூரண அன்பாக உருவெடுத்தன. அந்த அன்பும் செயல் வடிவம் எடுப்பதில் சிறந்து விளங்கியது.

திரைலிங்க சுவாமிகட்கு சுவாமிஜி வ ராணசியில் மரியாதை செலுத்துவதைக் காண்கிறோம். ஆக்ராவில் தாஜ்மஹாலைக் கண்டு சுவாமிஜி கண்ணீர் சிந்தினார். பிருந்தாவனம் செல்லும் வழியில் ''தீண்டத்தகாதவராகக் கருதப்பட்ட'' ஒரு புதியவரி

டம் குமாய் இரவல் வாங்கி, புகைப்பிடிக்கிறார் சுவாமிஜி. காஜிப்பூரில் மாமனிதரான பவஹாரிபாபா காரணத்துக்கும் காரியத்துக்கும், செயலுக்கும் விளைவுக்கும் இடையில் வேறுபாடு காணாமல் இருக்கும்படி அவருக்குக் கூறுகின்றார். ராஜபுதனத்தில்தான் ''ஒரு காண்டாமிருகத்தைப் போலத் தனியே அலைந்து திரி'' என்ற உபதேசம் அவருக்கு தம்மபதத்திலிருந்து கிடைத்தது. நிறைவாக கன்னியாகுமரியில் தன் லட்சியப் பணியை அடையாளம் கண்டுகொண்டார் சுவாமிஜி. சிக்காகோவில் சர்வ மத மகாசபையில் சென்று உரையாற்றும் முடிவை இங்குதான் அவர் எடுக்கின்றார்.

நாங்கள் வெவ்வேறு விதமான, ஆனால் ஒன்றோடொன்று தொடர்புடைய இச்சம்பவங்களைத் தேர்ந்தெடுத்து, சுவாமிஜியின் பயணங்களை மீண்டும் மக்கள் கண்முன் நிறுத்த முயன்றிருக்கின்றோம். அவர் கடவுளைக் காணவும், அன்புக்குரிய ஓரே உலகில் இறைவனைக் காணவும் முயன்றதை இக்கண்காட்சியில் காட்ட முயற்சி செய்திருக்கிறோம்.

## கண்காட்சி நிறுவப்பட்டுள்ள இடம்

இக்கண்காட்சி நிறுவப்பட்டுள்ள இடம், தமிழ்நாடு அரசு நீண்டகாலக் குத்தகையில் கேந்திரத்துக்குத் தந்துள்ள இடமாகும்; கன்னியாகுமரியில் முக்கியமான ஒரு இடத்தில், இரு முக்கிய சாலைகளின் சந்திப்பில் அனைவரும் காணும் இடத்தில் உள்ளது.

## சிற்பக்கலை / கட்டிடக்கலை:

தரையில் வேர்கொண்டு விண்ணை நோக்கி எழும் ''மேரு''வைப் போன்று இக்கட்டிடக் கூறுகள் அமைந்துள்ளன. கீழை நாடுகளின் ஆன்மீகக் கட்டிடக் கலையில் இது ஒரு சிறப்பு ஆகும்.

## காட்சிப் பொருள்கள்:

இந்த நிரந்தரக் கண்காட்சியில் 41 காட்சி மேடைகள் உள்ளன. இவை இக்கண்காட்சிக்கெனவே சிறப்பாக வடிவம் அமைக்கப்பட்டவை. சுவாமிஜியின் பயணங்களை, படங்கள், சிற்பங்கள் இவற்றின் மூலமும், ஆங்கிலம், ஹிந்தி ஆகிய மொழிகளில் வர்ணனைகள் மூலமும் சித்தரித்துக் காட்டியுள்ளோம். முக்கியமான காட்சிகளை ''புடைச் சிற்பங்கள்'' மூலம் காட்டியுள்ளோம். படங்கள் நிறுத்தப்பட்டுள்ள விதம் கட்டிடத்தின் வடிவமைப்புக்கும், சுவாமிஜி பயணம் சென்று பார்த்த இடங்களின் காலக்கிரமம், வரிசை இவற்றுக்கு ஏற்ப அமைந்துள்ளன.

சுவாமிஜியின் சில கடிதங்களின் புகைப்படங்கள் கண் காட்சியில் இடம் பெற்றுள்ளன. அவர் சென்ற வெவ்வேறு இடங்கட்கு அவர் வரைந்த கடிதங்கள் அவை. சுவாமிஜியின் சகோதரச் சீடர்களின் புகைப்படங்கள் சில இடம் பெற்றுள்ளன. சில முக்கியமான தலைவர்கள்; அவ்விடங்களின் அக்காலத் தோற் றத்தைச் சித்தரிக்கும் படங்கள் இவையும் இடம் பெற்றுள்ளன.

விவேகானந்த கேந்திரமாகிய ஆன்மீகத் தொண்டு நிறு வனம் கன்னியாகுமரிப் பாறையில் சுவாமிஜி தவம் செய்த புனித நிகழ்ச்சியின் நூற்றாண்டு விழாவின் ஒரு பகுதியாக, இக்கண் காட்சிக்கு ஏற்பாடு செய்துள்ளது, பாரதத்தை ஒன்றாக, பாரத நாட்டு மக்களை ஒன்றாக சுவாமிஜி தரிசித்தார். அவர் நினை வைப் போற்றும் வண்ணம் 1991 செப்டம்பர் 11-ந் தேதி உலக சகோதரத்துவ தினத்தன்று இக்கண்காட்சி துவக்கி வைக்கப்படுகின்றது.

**டாக்டர் எம். லெட்சுமி குமாரி**
தலைவி
விவேகானந்த கேந்திரம்
கன்னியாகுமரி

உலக சகோதரத்துவ தினம்
11-9-1991.

# காட்சி மேடை - 1

## "அலையும் துறவியை உருவாக்கிய அனல்"

அவருடைய தோற்றம் ஒரு இளைஞனின் உத்வேகமும் ஜீவசக்தியும் கொண்டு விளங்கியது. அவர் சராசரியை விடக் கொஞ்சம் அதிகம் உயரம் உடையவர். தோள்பகுதியில் கொஞ்சம் தடித்தவர். அகன்ற மார்பகம் உடையவர். அவர் தலை முன்னால் அகன்று இருந்தது மனச்சக்தி பெருகி இருந் ததையும் வளர்ச்சியையும் குறித்தது அவருடைய உடல் அம்சங் கட்குள்ளேயே மிகவும் கவர்ச்சிமிகுந்தவை, அவருடைய கண் கள்தான். அவை பெரியவை, அவருடைய அவ்வப்போதைய உணர்ச்சிகட்குத் தகுந்தமாதிரி கண்களின் நிறமும் மாறும். சில சமயங்களில் பார்வையின் கூர்மை, தீர்க்கம் இவற்றின் காரண மாக அவருடைய கண்கள் ஜொலிக்கும் மற்ற சமயங்களில் அவர் கண்களில் மகிழ்ச்சியும் பரபரப்பும் சுடர்விடும். அவர் பேசுகிறபோது, கேட்பவர் மட்டும்தான் உலகில் இருப்பது போலிருக்கும். கேட்பவருக்கும் பெருமிதமாக இருக்கும். சில ருக்கு அவரைப் பார்த்தால் பேரானந்தமுடைய கனவு காண் பவராகத் தோற்றம் அளிப்பார். சிலருக்கு ஆழ்ந்த சிந்தனை யாளராகத் தோற்றம் அளிப்பார். வேறு சிலருக்கு லட்சிய அன்பும் எழிலும், செழித்த உலகில் வாழ்பவரைப்போல் தோற்றம்

அளிப்பார். அவருடைய புன்னகை சாத்விகமும் பெருமகிழ்ச்சியும் விரவியதாகக் காட்சி தரும்.

''ஆனால் அவருக்கு ஒரு விஷயத்தில் சூடுபிடித்து விட்டாலோ உடன் இருப்பவர் இதயத்தில் அவர் முகம் அச்சத்தை உண்டாக்கும். உரையாடல்களில் அவர் பரபரப்புக் கொள்ளும் போதும், சிந்தனையில் ஆழ்ந்திருக்கும்போதும் அவருடைய முகமும் கண்களும் ஒளிபெற்றுத் திகழும்; அவருடைய குணநலன் எத்தனை சக்தி மிகுந்தது என்று தெரியவரும். அவர் எண்ணங்களில் ஆழ்ந்திருக்கும்போது பிறரிடமிருந்து விலகிப் போய்விடுவார். சக்தியுடன் பிறரை விலக்கித்தள்ளி விடுவது போலிருக்கும். அவரருகில் செல்லவே யாருக்கும் தைரியம் வராது. மிக மிகத் தீவிரமாகத் தனித்து ஒதுங்கிப் போய் விடும் தன்மை அவரிடம் இருந்த சிறப்புக் குணங்களில் ஒன்று. ஆனால், எப்போதும் அன்பும், மென்மையும், கண்ணியமும் கொண்ட தோற்றமும் அவருடைய பொதுக் குணங்களாகும். அவர் சுடர் விடும் ஆளுமை உடையவர். கண்ணியமும், மென்மையும், அருளும் கொண்டவர். சக்தி வாய்ந்த புறத்தோற்றம் கொண்டவர். புதிய யுகம் விஞ்ஞானம், பகுத்தறிவு, ஐயப்பாடுகள் இவற்றுக்குப் பேர்போனது. சுவாமி விவேகானந்தர் இந்த யுகத்தில் ஒரு நாயகராக விளங்கினார்.'' அவருக்கு நெருக்கமான ஒருவர், அந்த மதத் தலைவரைப் பற்றிக் கூறியவைதான் மேலே உள்ள கருத்துக்கள்.

இந்தக் கண்காட்சி, இந்த இளைஞரின் வாழ்வில் அவர் பரிவிராஜகராக அலைந்த நாட்களைப் பற்றிய கதையைச் சொல்லுகிறது. அவர் அப்போதுதான் துறவறம் பூண்டிருந்தார். அவர் நாடெங்கும் சுற்றித் திரிந்து, தனக்குள்ளும், நம்நாட்டு மக்களுக்குள்ளும் கடவுளைக் கண்டறிய முயன்றார். அவருடைய ஆளுமைக்கு அது ஒரு சோதனை நேரம். அவருடைய குணப்பொலிவுகள் பூரணமாகவும், பல்வித செழிப்புகளுடனும் வெளித்தோன்றுகின்ற நேரம் அது

கல்கத்தாவுக்கு அருகில் உள்ள அந்த்பூர் கிராமத்தில் ஒரு குளிர்கால இரவில் இந்தக்கதை துவங்குகின்றது. திறந்த வெளியில் சில இளம் துறவிகள் சுடர்விட்டெரியும் ஒரு தீயைச்சுற்றி குழுமி இருந்தனர். அவர்கள் அனைவரும் தட்சிணேஸ்வரத்து முனிவர் ஸ்ரீராமகிருஷ்ணரின் நேர் சீடர்கள். முனிவர் நரேந்திர நாத தத்தாவை சீடர்களின் தலைவராகத் தேர்ந்தெடுத்திருந்தார். நரேந்திரர் கல்கத்தா பல்கலைப் பட்டதாரி ஆவார். சில நாள் முன் நரேன் தன் சகோதரத் துறவிகளை ஒன்று கூட்டி

வரநகரில் ஒரு சிறிய மடத்தை நிறுவி இருந்தார். அத்துறவி கள் சமயம் சார்ந்த, சாராத பல நூல்களைப் படித்துக்கொண் டிருந்தார்கள். தியானம் செய்து கொண்டிருந்தார்கள். மேலும், கடுமையான வறுமையில் பல்வேறு ஆன்மீகப் பயிற்சிகளைச் செய்து கொண்டிருந்தார்கள்.

குளிர்ந்த இரவு: ஒளிரும் நட்சத்திரங்கள். சமய வாழ்க் கையில் அடியெடுத்து வைத்திருக்கும் இளம் சாதகர்களின் இத யத்தில் புதிய உற்சாகமும், புதிய ஒளியும் ஏற்பட்டன. அப் போது. தன் குருநாதர் தமக்கு முன் வைத்திருந்த இரட்டை இலட்சியங்களை அடைவதற்காக தாம் அனைவரும் ஒன்றாகப் பிணைக்கப்பட்டிருப்பதாக அவர்கள் உணர்ந்தனர், கடவுளை அடைதல், மனிதனுக்குத் தொண்டு புரிவதைக் கடவுள் வழி பாட்டின் ஒரு வகையாக ஏற்றுக் கொள்ளுதல், இவையே அந்த இரண்டு லட்சியங்கள்.

அன்றிரவு நீண்டநேரம் தியானம் செய்தார்கள்; அதன் பின் நரேந்திரநாதர் ஏசுநாதரின் கதையைத் தன் சகோதரத் துறவிகட்குக் கூறினார். அவருடைய அற்புதப் பிறப்பு, இறப்பு, பிறகு அவர் புத்துயிர் பெற்றது ஆகிய ரகசியங்களைக் கூறி னார். ''நரேந்திரனின் சொல்வன்மை காரணமாக அவ்விளை ஞர்கள் பவுலின் ஆன்மீக உலகில் நுழைந்தனர். பவுல் புனர் ஜீவனம் பெற்ற ஏசுநாதரின் நற்செய்தியைப் போதித்தவர். அவர்களும் கர்த்தர்களாகவே ஆகி கடவுளை அறிய வேண்டும் என்றார் நரேந்திரர். விறகுத் தீயின் முன்னால் நின்று கொண்டு, தம் முகங்கள் தீ ஜுவாலையில் பிரகாசிக்க தம் சிந்தனைக்குத் தடங்கலாக விறகெரியும் ஒலி மட்டுமே விளங்க கடவுள் முன் னிலையில் ஒருவருக்கொருவர் சாட்சியாக நின்று அவ்விளைஞர் கள் துறவு பூண்டார்கள்.''

மடத்துக்குத் திரும்பினார்கள். அலையும் துறவிகளாக உடனே புறப்படவேண்டும் என்ற அவாவினைத் தம்முள் உணர்ந் தார்கள். துறவிகள் அவ்வாறுதான் வாழவேண்டும் என்பது விதி. முதலில் நரேந்திரர் அந்த ஆசையை எதிர்த்தார். பிறகு ஆசையின் பலத்தை உணர்ந்து அதற்கு இணங்கினார். ஸ்ரீராம கிருஷ்ணரின் உத்தரவுப்படி அவர் செல்லவேண்டிய பாதை தெளிவாக, உறுதியாகத் தெரிந்தது. ஆனாலும் பாரத நாட் டினூடே அவர் மேற்கொள்ள இருந்த பயணம் குருநாதர் இட்ட பணி மாபெரும் பணிகளை ஆற்ற அவருக்கு வழி திறக்கும்; அவரைத் தயாரிக்கும். அவரை இயக்கி, மாபெரும் விரதம் பூண அவருக்கு உதவிய சக்தி எது என்பதை நாம் இங்கே காண்போம். அந்தக் கதை இதோ..............

## காட்சி மேடை - 2

**வாராணசி:**

அவ்விளம் துறவிக்கு (அவரை இனி விவேகானந்தர் என்றே அழைப்போம்) முன்னால் ஒரு லட்சியப்பணி இருந்தது. அதனை அவர் நிறைவேற்றியாக வேண்டும். அதனை எப்படிச் செய்து முடிப்பது? எவ்வகையில் அக்கடமையை ஆற்றுவது? அவர்கள் நிறுவிய சிறுமடத்திலேயே அப்பணி நிகழவேண்டுமா? அவருடைய சகோதரத் துறவிகள், இறைவனைத் தேடி புதிய பாதைகளிலே நடக்க விரும்பினார்கள். தன் விருப்பத்தை அவர்கள் மீது திணித்து அவர்களை நிறுத்தி வைப்பவரல்ல சுவாமிஜி. தனக்குள்ளே அலைந்து திரியும் ஆசை மீதூறுவதை சுவாமிஜி கண்டு கொண்டார். சரியான தருணம் வந்து விட்டது. துறவுச் சகோதரத்துவத்தின் தங்கச் சங்கிலிகளைத் துண்டித்து எறிந்தார். பயணமாகப் புறப்பட்டார்.

உடலில் காவி ஆடை, வதனத்தில் தேங்கிய ஞானத்தீ! அது தெய்வீக அன்பில் கனிந்திருந்தது. இத்தோற்றத்தில் சுவாமிஜி பாரதத்தின் தலையாய புனிதநகரான காசி வந்து சேர்ந்தார். இங்குதான் புத்தரும் ஆதிசங்கரரும் தாம் கண்ட பேருண்மைகளைப் போதித்தனர். தன் கரையெல்லாம் பல திருக்கோயில்கள் திகழ்வதாய் புனிதகங்கை எங்கும் தெய்வீக மணம் வீசிக் கொண்டிருந்தது. பாரத நாட்டின் குறுகிய வடிவத்தை நாம் இங்கே காணலாம். ஆண்டு முழுவதும் நாட்டின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் மக்கள் இப்பழைய நகருக்கு வந்து குவிந்த வண்ணம் இருந்தனர். அதன் வீதிகளும் சந்துகளும் புனித யாத்திரை செய்வோரின் அடியோசையை எதிரொலித்தன. சாதுக்களும், சன்னியாசிகளும் காலம் காலமாக இங்கே வந்த வண்ணம் இருந்தனர்.

சுவாமி விவேகானந்தர் இங்கே ஒரு ஆசிரமத்தில் தங்கினார். துறவிகளின் வழக்கப்படி தினம் பிச்சை எடுத்து உணவு உண்டார். கோயில்களில் வழிபட்டார். படித்துறைகளில் அமர்ந்து தியானம் செய்தார். யாத்திரை செய்ய வந்தவர்களோடு ஒன்றறக் கலந்தார். அக்காலத்தில் வாராணசியில் வசித்து வந்த புகழ்பெற்ற பெரியவர்களைச் சந்தித்தார் சுவாமிஜி. திரைலிங்க சுவாமிக்குக் காசியில் இரண்டாவது விச்வேச்வரர் என்று மரியாதை. அவர் ஆழ்ந்த மௌனத்திலும், தியானத்திலும் இருந்தார் சுவாமிஜி அவரைச் சென்று தரிசித்தார் பிறகு விவேகானந்தர் அவரைப் பற்றிக் கூறினார்— ''அவர் மௌன உபதேசம் தருகிறார்''.

சுவாமி பாஸ்கரானந்தர் என்ற துறவியும் ஞானியெனப் புகழ் பெற்றிருந்தார். சுவாமி விவேகானந்தர் அவரையும் சென்று பார்த்தார். பாஸ்கரானந்தர் ''அவருடைய மனம் ஒரு மாபெரும் தீபத்தைப் போன்றிருக்கிறது'' என்று விவேகானந்தரைப் பற்றிக் குறிப்பிட்டார். பாஸ்கரானந்தர் பொன், பெண் விஷயங்களில் ஒருவர் முழு வெற்றிபெற முடியுமா என்று ஐயம் தெரிவித்ததைக் கண்ட விவேகானந்தர் ஏமாற்றமே அடைந்தார். இந்த சந்தேகம் விவேகானந்தரின் அனுபவத்துக்கு முரணானது, அவர் ஸ்ரீ ராமகிருஷ்ணரை உதாரணமாகக் காட்டினார். அவர் கீழான இயற்கையை வென்று, பெண்ணாசை, பொன்னாசைகளிலிருந்து விடுபட்டவர் என்று காட்டினார்.

சுவாமி விவேகானந்தர் வாராணசியைக் கண்டு பரவசம் அடைபவர். தன் பயணங்களின்போது அவர் மூன்று தடவை இத்தலத்துக்கு வந்தார்.

வாராணசிக்கு சுவாமி விவேகானந்தர் முதல் தடவை வந்திருந்த போது ஒரு விநோதமான சம்பவம் நடைபெற்றது. அது சுவாமிஜிக்கு ஒரு முக்கியமான பாடத்தைக் கற்பித்தது. ஒருநாள் அவரை ஒரு குரங்குக்கூட்டம் துரத்தத் தொடங்கிற்று. அவர் அவற்றிடமிருந்து தப்பித்து ஓடத் தொடங்கினார். யாரோ ஒரு துறவி கூவினார். ''அந்த முரட்டு மிருகங்களை எதிர்த்து நில்.'' ஆஹா! அவர் நின்று தைரியமாக அம்மிருகங்களை எதிர்நோக்கிய உடனேயே அவை பின்வாங்கின. இவ்வனுபவமும் துறவியின் குரலும் அவர் நினைவில் ஆழப்பதிந்திருந்தன.

பிற்காலத்தில் ஒரு போதகராக அவர் ஆனபோது இச்சம்பவத்தைக் குறிப்பிட்டு, மக்களிடம் தம் ஆபத்துக்களையும், இடையூறுகளையும் எதிர்நோக்கி பயப்படாமல் நிற்கும்படியும் அவற்றிலிருந்து ஓடாமல் இருக்கும்படியும் கேட்டுக்கொண்டார்.

## காட்சி மேடை - 3

### மறுபடியும் வரநகர் மடத்துக்கு

வாராணசியில் ஒரு வாரம் தங்கிவிட்டு சுவாமிஜி திரும்பவும் கல்கத்தா அருகில் உள்ள வரநகர் மடம் திரும்பினார். தன்னைத் தளைத்த தங்கச் சங்கிலியை இன்னும் அவர் அறுத்தெறிந்தாகவில்லை. திரும்பவும் தியானம், நன்னூல் ஓதுதல், சமயச்சொற்பொழிவுகள் ஆற்றுதல் இவற்றில் அவர் மூழ்கினார். இந்த சமயம் தொடங்கிதான் அவர் தம் எதிர்கால லட்சியப்

பணி பற்றித் தன் உள்ளுணர்வில் காணத் தொடங்கினார். அவர் தம்மைத்தாமே சில கேள்விகள் கேட்டுக்கொண்டார். ஆன்மா தெய்வமயமானது படைப்பு முழுவதும் ஒன்று என்ற வேதாந்தக் கருத்துக்கள் சத்தியங்கள் எப்போதுமே செல்லரித்துப்போன புத்தகங்களிலேயே மறைந்து கிடந்து பண்டிதர்களின் பொழுது போக்காகவும், குகைகளிலும் தனித்தும் வாழும் துறவிகளின் அனுபவமாகவும் கிடந்தொழிய வேண்டுமா? வாழ்க்கையின் பிரச்சினைகளோடு போராடிக் கொண்டிருக்கும் சாதாரண மனிதனின் வாழ்வில் இவ்வுண்மைகட்கு எந்த முக்கியத்துவமும் இல்லையா? சாதாரண மனிதனுக்கு சாத்திர அறிவு இல்லை என்பதால் அவனுக்கு வேதாந்தத்தின் ஞான ஒளி கிட்டவே கிட்டாதா?

சாதாரண மக்களுக்கும், குறிப்பாக ஏழை எளியவர்கட்கும் வேதாந்த தத்துவம் போதிப்பதின் தேவையை நரேந்திரர் தன் சகோதரத் துறவிகட்கு எடுத்துரைத்தார். ஆனால், அவருடைய சகோதரத் துறவிகள் அந்த வழியில் நடக்க இன்னும் தயாராகவில்லை. அவர்களிடம் நரேன் கூறினார்: ''எல்லாரும் தான் உபதேசம் பண்ணுகிறார்கள். அவர்கள் தம்மை அறியாமலே செய்கின்ற பணியை நான் முயன்று பிரக்ஞை பூர்வமாக ஆற்றுவேன். நான் தாழ்ந்த சேரிகட்குச் சென்று பறையர்களிடமும் இவ்வுண்மைகளை போதிப்பேன்.''

**வாரணசி:**

தாம் இரண்டாவது தடவை வாரணசி சென்றபோது சுவாமிஜி சம்ஸ்கிருத அறிஞர் பிரமததாஸ் மித்ராவுடன் நெருங்கிய நட்பு பூண்டார். இருவருமே கற்றறிந்த வல்லுனர்கள். ஹிந்துக்களின் சமூகப் பழக்க வழக்கங்களையும் சாத்திரங்களின் எளிதில் விளங்காத பகுதிகளையும் விவாதிப்பார்கள். பிறகு அவர்கள் கடிதப்போக்குவரத்தின் மூலமும் தம் தொடர்புகளைத் தக்க வைத்துக் கொண்டார்கள்.

தம் நீண்ட பயணங்களின்போது சுவாமிஜி எங்கெல்லாம் பண்டிதர்களையும் அறிஞர்களையும் சந்தித்தாரோ அங்கெல்லாம் வாய்ப்பை நழுவவிடாது அவர்களோடு தொடர்பு கொண்டார். இவ்வாறு அவர் பாரதப் பாரம்பரியம், ஹிந்து தத்துவம், சாத்திரங்கள் இவை பற்றி ஆழ்ந்த, ஜீவனுள்ள, அறிவினைப் பெறத் தொடங்கினார்.

**அயோத்யா:**

வாராணசியிலிருந்து சுவாமி விவேகானந்தர் அயோத்யா சென்றார். அது ஸ்ரீ ராமனின் நகரம். ஸ்ரீராமர் மன்னர், அவ

தார புருஷர், சத்தியவான், உயர்ந்தவர். விவேகானந்தர் குழந்தையாக இருக்கும்போது தன் அன்னையார் ராமாயணக் கதைகள் கூறக் கேட்டதுண்டு. ஸ்ரீ ஹனுமான் என்ற மாபெரும் பக்தரின் வீர தீரச்செயல்களைப் பற்றிக் கேள்விப்பட்டதுண்டு. சுவாமிஜி அயோத்தியில் ராமாயித் துறவிகளுடன் தங்கி அவர் களுடைய வழிகளைப் பின்பற்றி, பிச்சை எடுத்துண்டு, அவர் களுடைய பஜனையில் கலந்து கொண்டு, ராமரைப் புகழ்ந்து ராமநாமத்தில் மூழ்கித் திளைத்தார். அவதார மன்னர் நிறுவிய ராமராஜ்யத்தை மனத்தில் சித்திரமாகக் கண்டார். ராமர் தன்னை அடக்கி தன் விருப்பு வெறுப்புக்களை விட்டொழித்து, மக்க ளுக்குக் கீழ்ப்படிந்து அவர்களுடையக் எஜமானராக இராமல் பணியாளாக தொண்டு புரிந்தார்.

## லக்னௌ (லட்சுமண புரி)

அயோத்தியிலிருந்து ஸ்வாமிஜி பிருந்தாவனத்துக்குப் புறப்பட்டார். வழியில் லக்னௌவும் ஆக்ராவும் சென்றார். இவ்விரு மாநகரங்களும் பாரதத்தில் முஸ்லிம் ஆட்சியின் முக்கிய இடங்களாகும். அயோத்தி நவாப்கள் உண்டாக்கிய அழகு நகரம், இன்ப நகரமே லக்னௌ. அது தோட்டங்களும் அரண்மனைகளும் நிறைந்த நகரம். சுவாமிஜி ஒரு கலை உள் ளம் படைத்த இசைவாணர். ஆதலால் பெரும் ஈடுபாட்டுடன், கடந்த கால அற்புதங்களையும், அந்நகரின் வரலாறு, கட்டிடக் கலை, கலை, இசை இவற்றைக் கண்டார். பாரத நாட்டின் வரலாறும், பண்பாடும், பல்வேறு சிறப்பம்சங்களைக் கொண் டது எனினும் அது சிதையாமல் ஒன்றாகப் பின்னப்பட்ட தாகவே காட்சி அளித்தது. பாரதத்தின் உயிரோட்டமானது ஒட்டுமொத்தமாகப் பார்த்தால் ஒன்றாக இருப்பினும் ஒரே ஜீவசக்தி கொண்டதாக இருப்பினும் தன்னைத்தானே அது பலவிதங்களில் வெளிக்காட்டிக் கொண்டது.

# காட்சி மேடை - 4

## ஆக்ரா

லக்னௌவிலிருந்து சுவாமிஜி ஆக்ரா சென்றார். அது புராதன நகரம் 'அக்ரவனம்' என்ற பெயரில் மஹாபாரதத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. அந்தப் பழைய இடத்தில் 16-ம் நூற் றாண்டில் முகலாய ஆட்சியின் பீடம் தழைக்கத் தொடங்கிற்று. பேரரசர் அக்பர் அந்நகரை மகத்தானதாகச் செய்துவிட்டார். அவருடைய புதல்வரான ஜஹாங்கீர், பேரரான ஷாஜஹானும் அதற்குப் புகழ் சேர்த்தனர். இன்று ஆக்ராவும், அதன் அருகே

இருக்கும் சிக்கந்தராவும், பதேஹ்பூர் சிக்ரியும் முகல் மாமன்னர்களின் பெருமைக்கு நினைவுச்சின்னமாக விளங்கிக் கொண்டிருக்கின்றன. தாஜ்மஹால் என்பது கல்லில் வடிக்கப்பட்டதோர் கவிதை. அது கண்டு சுவாமிஜி கண்ணீர் சிந்தினார்.

சுவாமிஜி வெறுங்காலுடன் நடந்தார். அவருக்குப் பின்னே என்றென்றுமான கால உணர்வு நின்று பலமூட்டியது. சுவாமிஜி சமீபத்தில் தான் நொறுக்கப்பட்ட முகலாயப் பேரரசின் படாடோப, அரசியல் சக்தியின் அரங்கத்துள் அடியெடுத்து வைத்தார். அக்காட்சிகள் அவர் மனத்தைக் கவர்ந்தன. சுவாமிஜியின் அயர்லாந்து சிஷ்யை நிவேதிதை கூறுகின்றார்:- சுவாமிஜி முகலாயர்களின் சாதனைகளைப் பெரிதும் புகழ்ந்தார். பல தடவைகள் டில்லி, ஆக்ரா பற்றிய வர்ணனைகளில் சுவாமிஜி ஈடுபட்டு விடுவார். ஷாஜஹானைப் பற்றி உற்சாகத்துடன் அவர் பேசுவது வழக்கம். ''ஆஹா அவரன்றோ அக்காலத்தின் பெருமையாக விளங்கியவர்! விவேக உணர்வும், அழகுணர்வும் உடையவராயிற்றே அவர். அவரே ஒரு கலைஞர்தானே! அவர் ஓவியம் வரைந்த கையெழுத்துப் பிரதி ஒன்றைக் கண்டேன். அது பாரதத்தின் கலைப் பொக்கிஷங்களில் ஒன்று'' என்றார் சுவாமிஜி. சுவாமிஜி முன்பே பாரதநாட்டின் வரலாற்றைப் படித்திருந்தார். அவருடைய நம்பிக்கை என்னவென்றால் ''பாரதத்துக்குத் தேவையானது எல்லாம் சக்திவாய்ந்த 'ரஜஸ்' (செயலூக்கம்) தான். தலையிலிருந்து கால் வரை ஒவ்வொரு நாடி நரம்பிலும் ரஜஸ் வேண்டும்'', என்பதுதான். ஆக்ராவில் ஒவ்வொரு கல்லிலும், சமாதியிலும் இந்த ரஜஸ் வெளிப்படுவதை சுவாமிஜி அடையாளம் கண்டு கொண்டார். முகலாயர்களின் தர்பாரைச் சூழ்ந்திருந்த க்ஷத்திரிய சக்தியின் அறிவின் பெருமையையும் சுவாமி விவேகானந்தர் கண்டார்.

ஆக்ராவில் அவர் கண்ட காட்சிகளால் நம் அலையும் துறவியின் கலையன்பு பலம் பெற்றது. முகலாயக் கட்டிடக் கலையின் கருத்து, பாணி இவற்றில் உண்டான மாறுபாடுகளையும் சுவாமிஜி கூர்ந்து கவனித்தார் அவருடைய கருத்தினை சகோதரி கிறிஸ்டைன் இவ்வாறு கூறுகின்றார்: நூர்ஜஹானின் ஆதிக்கத்தின்போதுதான் கட்டிடக்கலையின் புதிய பாணிகள் துவங்கின. அக்கட்டிடக் கலையில் பெண்மை மிளிர்ந்தது. அக்பர் கட்டிய கட்டிடங்களில் இருந்த ஆண்மைமிகு சிவப்பு மணற் கற்களுக்குப் பதிலாக, ரத்தினக் கற்களும், ஒளிரும் கற்களும் உள்ளிழைக்கப்பட்ட சலவைக்கல் இடம் பெற்றது. வெறும் சொரசொரப்பான கற்சுவர்கட்குப் பதிலாக ரத்தினக்

கற்கள் இழைத்த சுவர்கள் எழுந்தன. மத்திய ஆசியப்பீடபூமி யின் வேகம், பலம் இவற்றின் இடத்தை பாரசீகத்தின் மென்மை யும், பெண்மையும் பிடித்துக் கொண்டன அதன் பயனாகத் தான் எதிர்காலத்துக்கு தாஜ்மஹால், ஆக்ரா, டெல்லி, லாஹோரின் சலவைக்கல் மாளிகைகளும் பரிசாகக் கிடைத்தன.''

## காட்சி மேடை-5

### பிருந்தாவனம்

பிருந்தாவனம் செல்லும் வழியில் நடந்த ஒரு சம்பவம், சுவாமிஜி தன் வாழ்க்கையில் ஒரேயடியாக, எப்போதைக்குமாக, சாதித்தடைகளை உதறித் தள்ளுமாறு செய்தது. வெறுங்காலு டன், கையில் ஒரு காசும் இன்றி சுவாமிஜி தள்ளாடி நடந்து கொண்டிருந்தார். வழியில் சாலையில் ஒரு மனிதர் புகைகுடித் துக் கொண்டிருப்பதைப் பார்த்தார். அவருடைய புகையிலைக் குடுவையிலிருந்து ஒருதடவை ''ஒரு இழுப்பு இழுத்துவிட்டுத் தருகிறேன்'' என்றார் சுவாமிஜி. அம்மனிதரோ ''தீண்டப் படாதவர்''. அவ்வாறு தன் புகைக்குழாயை சுவாமிக்குத் தர அஞ்சிக் கூசிப் பின்வாங்கினார் அவர். சுவாமிஜி தன் வழியில் தொடர்ந்து நடந்தார். தனக்குத் தானே கூறிக்கொண்டார். ''என்ன வெட்கக்கேடு! என் வாழ்நாள் முழுவதும் ஆன்மாவின் இரட்டையற்ற (அத்வைத) தன்மையைப் பற்றித் தியானம் செய்து வந்திருக்கின்றேன். என்னை இந்த சாதிச் சுழல் அமிழ்த் தப் பார்க்கிறதே! இயற்கையின் குணங்களை மீறுவது எவ்வளவு கடினம்!'' அவர் திரும்ப அந்தத் ''தீண்டப்படாதவரிடம்'' வந்து அவரைக் கெஞ்சி புகைக் குடுவையைத் தனக்குத் தரும் படி கேட்டுக் கொண்டார். அவர் மறுத்தும் தடுத்தும்கூட ஆனந்தமாகப் புகைத்துவிட்டு அங்கிருந்து கிளம்பி பிருந்தாவனம் சென்றார்.

பிற்காலத்தில் இந்த சம்பவத்தைக் குறிப்பிட்டு சுவாமி விவேகானந்தர் கூறுவார்: ''துறவியின் லட்சியங்களைக் கடைப் பிடிப்பது சுலபம் என்று எண்ணுகின்றாயா? அது மிகக் கடினம், தடைகள் நிறைந்தது. துறவு விரதம் பூண்டால் ஒவ்வொரு கணமும் தன்னைத்தானே சோதித்துக் கொண்டு சாதி, நிறம் முதலிய பேதங்கள் தொலைந்தனவா என்று பார்க்க வேண்டும். இந்த சம்பவத்திலிருந்து நான் ஒருவரையும் வெறுக்கக்கூடாது என்றும் அனைவரையும் கடவுளின் குழந்தையாகக் கருதவேண் டும் என்றும் பாடம் கற்றுக் கொண்டேன்''.

சுவாமிஜி பிருந்தாவனம் வந்து சேர்ந்தார். ஆத்மாக்கள் அன்பினால் கிருஷ்ணருடன் இணைந்து கோபியர் ஆகி இறைவனு

டன் விளையாடிய பூங்காதான் பிருந்தாவனம். விவேகானந்தர் இயல்பினால் ஒரு ஞானி. கடவுளை அடைவதற்கு பக்தி என்பது இனியதும் சக்தி வாய்ந்ததுமான ஒரு வழி என்று இங்கே சுவாமிஜி அனுபவத்தில் கண்டு கொண்டார். மனத்தின் ஆழத்திலிருந்து பக்தர் விடும் அழைப்பினைக் கிருஷ்ணர் செவிமடுப்பார் என்று கூறப்படுகின்றது. சுவாமிஜி தன் தெய்வபக்தியை சோதனை செய்து பார்க்க விரும்பினார். ஒருநாள் யாராவது தன்னிடம் உணவு கொண்டுவந்து கொடுக்கும் வரை தான் உணவு உண்ணமாட்டேன் என்று சுவாமிஜி விரதம் பூண்டார். மழை கனமாகப் பெய்து கொண்டிருந்தது. அவர் மண்ணிலும், தண்ணீரிலுமாகத் தள்ளாடிச் சென்று கொண்டிருந்தார். மதியவேளை. களைத்துப் பசியுடனும் இருந்தார் சுவாமிஜி. இருப்பினும் அவர் நடந்து கொண்டே இருந்தார். திடீரென பின்னாலிருந்து யாரோ அவரை அழைத்தார்கள். துறவி நிற்கவில்லை. கூப்பிட்டவர் தொடர்ந்து வந்தார். ''நான் உங்களுக்கென உணவு கொண்டு வந்திருக்கிறேன்.'' அப்போதும் சுவாமிஜி நிற்கவில்லை. அந்த மனிதர் சுவாமிஜியைத் தொடர்ந்து ஓடினார். கடைசியில் சுவாமிஜியைப் பிடித்து அவருக்கு உணவினைக் கொடுத்தார். உணவினை சுவாமிஜியிடம் கொடுத்து விட்டு வந்தபடியே மௌனமாகத் திரும்பி விட்டார் அவர். ஸ்ரீகிருஷ்ணர் தன் பக்தனிடம் வைத்த அன்பினைக் கண்டு சுவாமிஜி ஆனந்தக் கண்ணீர் பெருக்கியவாறே நின்று விட்டார்.

இன்னொரு தடவை விவேகானந்தர் ராதாகுளம் சென்று அதில் நீராட விரும்பினார். அவருடைய அரைத்துணி மட்டுமே அவரிடம் இருந்தது. அதைப் படித்துறையில் உலர்த்திவிட்டுக் குளிக்கச் சென்றார் திரும்பி வந்து பார்த்தால் அவரிடமிருந்த ஒரே துணி குரங்குகள் கையில் இருந்தது. எவ்வளவோ முயன்றும் குரங்குகள் துணியைத் திருப்பித் தரவில்லை. சுவாமிஜி காட்டுக்குள் சென்று மறைந்தார். திடீரென ஒரு மனிதர் தோன்றி ஒரு காவி உடையை அவரிடம் தந்து விட்டு காட்டுக்குள் மறைந்து விட்டார்.

இவ்விரு நிகழ்ச்சிகளும் சுவாமிஜியின் மனத்தில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தின. ஸ்ரீகிருஷ்ணர் இன்னும் பிருந்தாவனத்தில் தன் விளையாட்டில் ஈடுபட்டிருப்பதாகவும், உண்மையான இதயங்கள் தன்னை அணுகி விளையாட்டில் சேர்ந்து கொள்ள வேண்டும் என்று தேடிக் கொண்டிருப்பதாகவும் தன் தெய்வீக அன்புத் தோட்டத்தில் விளையாடுவதாகவும் சுவாமிஜிக்குத் தோன்றிற்று.

கடவுள்பக்தி எனும் வெள்ளத்தில் சாதித்தடைகளும் மனத்தடைகளும் சுலபமாக அந்தப் புனிதத்தலத்தில் தகர்ந்து விடுவதை சுவாமிஜி கவனித்தார். ஸ்ரீசைதன்யர் அவற்றைத் தகர்த்தார். பிறகு வந்த ஸ்ரீராமகிருஷ்ணரும் ''பக்தர்கட்கிடையே சாதி வேறுபாடுகள் இருக்கலாகாது'' என்றார். ஸ்ரீகிருஷ்ணரின் நாமத்தை ஜபித்துக்கொண்டு பிருந்தாவனத்தில் ஏழை வைராகிகள் பணக்காரர்களோடு எளிதாகக் கலந்து பழகினார்கள். நாள் முழுவதும் எல்லா சாதி, இன பக்தர்களும் ஒன்றாகக் கலந்து வழிபாடுகள் செய்தார்கள்.

## கடிதம் 1

பிரமததாஸ் மித்ராவுக்கு சுவாமி விவேகானந்தர் எழுதியது.

பிருந்தாவனம்,
20-8-1888.

அன்புள்ள ஐயா,

என்னுடைய சகோதரத் துறவி ஒருவர், வயது முதிர்ந்தவர். அவர் கேதார்நாத் பத்ரிநாத் போய்விட்டு இப்போது தான் பிருந்தாவனம் வந்திருக்கிறார். அவர் கங்காதரரைச் சந்தித்துள்ளார். இரண்டு தடவை கங்காதர் திப்பத் பூட்டான் வரை உயரே ஏறிச் சென்றார். அவர் மிகவும் மகிழ்ச்சியுடன் இருக்கிறார். தன்னைமீறி இந்தச் சந்திப்பில் அழுதாராம் குளிர்காலத்தில் கன்க்கலில் அவர் தங்கி இருந்தார். தாங்கள் அளித்த தண்ணீர் பாத்திரத்தை அவர் இன்னும் தம்மிடம் வைத்துக் கொண்டிருக்கின்றார். அவர் திரும்பி வரப்போகிறார் இந்த மாதத்திலேயே பிருந்தாவனத்தில் அவரை எதிர்பார்க்கிறோம். அவரைச் சந்திக்கிற நம்பிக்கையில் நான் ஹர்த்வார் செல்லும் திட்டத்தை சில நாட்களுக்குத் தள்ளிப் போட்டிருக்கிறேன். தங்களுடன் இருக்கும் சிவபக்த பிராம்மணருக்கு என் நமஸ்காரங்களைத் தெரிவியுங்கள். தங்களுக்கும் என் வணக்கங்கள்.

தங்கள்,
விவேகானந்தர்

# காட்சி மேடை - 6

## ஹாத்ரஸ்

அடுத்து நாம் சுவாமிஜியை ஹாத்ரஸ் புகைவண்டி நிலையத்தில் சந்திக்கிறோம். அவர் புனித யாத்திரைத் தலமான ஹர்த்வார் நோக்கிச் சென்று கொண்டிருந்தார். அவர் ஒரு தனி

இடத்தில் தன் தண்டம், கமண்டலம், காவித்துணி சுற்றிய கீதைப்புத்தகம் இவற்றுடன் உட்கார்ந்திருந்தார். புகைவண்டி நிலைய அதிகாரி சரத் சந்திரகுப்தா சுவாமிஜியின் கம்பீரத் தோற்றத்தினால் ஈர்க்கப்பட்டார் அவரை அணுகி, வணங்கி ''தங்களுக்குப் பசிக்கிறதா சுவாமி''? என்று கேட்டார்.

சுவாமிஜி ''ஆம்! உங்கள் விருந்தாளிக்கு எப்படி உபசரணைகள் செய்வீர்கள்?'' பதிலாக புகைவண்டி நிலைய அதிகாரி ஒரு பாரசீகக் கவிதையை மேற்கோள் காட்டினார். ''அன்பிற்குரியவரே, தாங்கள் என் இல்லத்துக்கு வந்திருக்கின்றீர்கள், தங்களுக்காக என் இதயத்தின் தசையை எடுத்து சுவைமிகுந்த சறி சமைப்பேன்.''

அன்று மாலை சரத் சந்திரகுப்தா சுவாமிஜிக்கு அருகே அமர்ந்து அவரிடம் வேண்டிக்கொண்டார் ''எனக்கு வித்தை (ஞானம்) அளியுங்கள்.'' பதிலாக சுவாமி விவேகானந்தர் வித்யா சுந்தரின் கதையிலிருந்து ஒரு வங்காளிப் பாடலைப் பாடினார். ''உனக்கு ஞானம் வேண்டுமென்றால் உன் அழகிய முகத்தை சாம்பலினால் மூடிக்கொள்.'' சுவாமிஜியின் பக்தரோ அந்தச் சொற்களுக்கு நேரிடையாகப் பொருள் கொண்டுவிட்டார். வீட்டுக்குள் சென்று முகத்தில் சாம்பலைப் பூசிக்கொண்டு வெளியே வந்தார். சுவாமிஜி சிரித்து விட்டார். பிறகு அவருக்குச் சில சோதனைகளை வைத்துவிட்டு, மந்திர தீட்சை கொடுத்தார். பிறகு சுவாமி விவேகானந்தர் சரத் தான் தன் முதல் சீடர் என்றும் ''என் ஆன்மாவின் முதல் குழந்தை'' என்றும் கூறினார்.

ஹாத்ரஸில் சுவாமிஜி ப்ரோஜன் பாபுவின் இல்லத்தில் தங்கினார். மாலை வேளைகளில் வங்காளி சமுதாயம் முழுக்க அங்கே ஒன்று கூடும். சுவாமிஜி தன் இனிய குரலில் கலைத் திறமையுடன் உள்ளத்தை உருக்கும் வண்ணம் பாடல்கள் பாடுவார். ப்ரோஜன் பாபுவின் இல்லத்தில் நடந்த இந்தக் கூட்டங்கள் அங்கிருந்த வங்காளிகட்குப் பல நன்மைகளைச் செய்தன.

அவர்கள் பேதபாவங்களை மறந்தனர். எல்லோரும் ஓரிடத்தில் குழுமி குழந்தைகளைப் போல் சுவாமிஜி கூறுவதைக் கேட்டனர் மத்தியதர வர்க்கத்தைச் சேர்ந்த அந்த வங்காளிகளின் வாழ்க்கை நிலையை சுவாமிஜி கூர்ந்து கவனித்தார். அவர்களுடைய பிரச்சினைகளைக் குறித்துக் கொண்டார். அவ்வாறே அவர் சென்ற மற்ற இடங்களான காஜிப்பூர், பாகல்பூர், அலஹாபாத், மேரட், கண்ட்வா ஆகிய ஊர்களிலும் தாம் பழகிய மக்களின் வாழ்க்கைப் பிரச்சினைகளை சுவாமிஜி

கவனித்தார். பாரதத்தையும், அதன் மக்களையும் புரிந்து கொள்ளும் கடினமான முயற்சி இப்படித்தான் துவங்கிற்று. அவருடைய அனுபவங்கள் எவ்வளவு மனவலிவைக் குறைப்பவையாக இருந்தாலும் அவருடைய வாழ்க்கையின் லட்சியப் பணியைப் புரிந்து கொள்ள அவை அவருக்கு உதவின.

சுவாமிஜி ஹாத்ரஸில் தங்கி இருந்தபோது ஒன்றுக்கொன்று நேர் எதிரிடையான இக்கருத்துக்கள் சுவாமிஜியின் சிந்தனையில் இடம் பெற்றிருந்தன. ''ஒன்று இமயமலையின் உட்பகுதியில் இருந்த பத்ரி நாராயணனுக்குச் சென்று அதன் தனிமையில் தியானம் செய்து தன்னையே இழந்துவிடுதல்; இன்னொன்று குரு ஸ்ரீராமகிருஷ்ணர் சுவாமிஜியிடம் ஒப்படைத்திருந்த லட்சியப் பணியாகிய மக்கள் சேவையை இறைவன் சேவையாகப் புரிதல் - அதன்மூலம் பாரதத்தின் ஆன்மீகப் புத்துயிரூட்டும் பணிக்கு அடிகோலுதல்.''

ஒருநாள் சரத்திடம் பேசிக் கொண்டிருக்கும்போது அவர் கூறினார். ''நான் ஒரு மகத்தான லட்சியப் பணியை நிறைவேற்றியாக வேண்டும் என்சக்தி எவ்வளவு சிறியதென்று உணரும்போது மனம் தளர்ந்து போகிறேன். என் குரு என் தாய்நாட்டிற்குப் புத்துயிர் ஊட்டும் பணியில் என்னை அர்ப்பணித்துக் கொள்ளும்படி எனக்கு உத்தரவிட்டார். ஆன்மீகம் வீழ்ச்சி அடைந்திருக்கின்றது. பசியும், பட்டினியும் நாட்டில் தலைவிரித்தாடுகின்றன. பாரதம் மறுபடியும் செயல் ஊக்கம் உடைய நாடாக வேண்டும். தன் ஆன்மீக பலத்தின் மூலம் உலகின் நன்மதிப்பைப் பாரதம் பெறவேண்டும்''

சரத் உடனே இதற்குத் தக்க விடையளித்தார். துறவு மேற்கொண்டார் சுவாமி அவருக்குத் துறவளித்து சதானந்தர் என்ற துறவுத் திருநாமமும் அளித்தார். ஹாத்ரஸிலிருந்து ஹரித்வார் வரை அவரும் சுவாமி விவேகானந்தருடன் புனிதப் பயணம் செய்தார்.

## காட்சி மேடை - 7

### ரிஷிகேசம்

பிறகு சுவாமிஜியும் சரத் சந்திரகுப்தாவும் ரிஷிகேசம் சென்றார்கள். ரிஷிகேசம் வந்தபோது சுவாமி விவேகானந்தருக்கு என்ன தோன்றிற்று என்பதை அவருடைய இந்தச் சொற்கள் கூறும்: ''ரிஷிகேசத்தில் கங்கையைக் கண்ட நினைவு இருக்கிறதா? தெளிந்த நீலநிறமுள்ள நீர்! அதில் ஐந்து கஜம் ஆழத்தில் நீந்தும் மீன்களின் இறக்கைகளைக் கூட எண்ணிவிடலாமே!

அற்புத, இனிய மிகக்குளிர்ந்த, மனத்தைக் கவர்ந்திழுக்கும் நீரோட்டம்! வால்மீகியின் சுலோகங்களில் பாடப்பட்ட கங்கை! ஓடும் நீரோட்டம் ''ஹர ஹர'' என்று ஒலிக்க அருகிலுள்ள மலைச்சரிவுகள் 'ஹர ஹர' என்று அதனை எதிரொலிக்குமே! வனத்தில் வாழ்க்கை உனக்கு நினைவில் இருக்கிறதா? பல வீடுகளில் பிச்சை எடுத்து உண்டது உனக்கு நினைவில் நிற்கின்றதா? கங்கையின் நடுவில் நீட்டிக் கொண்டிருக்கும் சிறு சிறு பாறைகள் மீது அமர்ந்து உணவுண்டோமே, கைகளினால் அந்த நீரை வாரி வயிறு முட்டக் குடித்தோமே ஞாபகம் இல்லை?''

இப்படிப்பட்ட நகரம் ரிஷிகேசம்; பல பிரிவுகளைச் சேர்ந்த துறவிகள், நாட்டின் பல பகுதிகளிலிருந்து அங்கே வருவார்கள், அவர்களை அங்கே சந்திக்கலாமே! விவேகானந்தர் துறவிகளிடையே சௌகரியமாக இருந்தார். அவர்களோடு தாராளமாகக் கலந்து பழகினார்; வாழ்ந்தார். பிற்காலத்தில் இத்துறவிகள் சிலரின் தன்மையும் சாதனையும் பற்றி அவர் குறிப்பிட்டார்: ''வெவ்வேறு சம்பிரதாயங்களைச் சேர்ந்த அத்தியாகிகள் எப்போதும் பயணம் செய்துகொண்டே இருப்பர். சிலர் தசநாமிகள், சிலர் வைராகிகள், சிலர் பந்த்திகள், இவர்கள் ஒவ்வொரு வீட்டு வாசலுக்கும் சமயக் கருத்துக்களை எடுத்துச் செல்வர். அதற்கு விலை என்ன தெரியுமா? சிறிதளவு உணவு தான். அவர்களில் பலர் மிக உயர்ந்தவர்கள், பற்றற்றவர்கள். கச்சுபந்த்தி எனும் சுதந்திர சன்னியாசி ஒருவர் இருக்கிறார் (இவர்கள் எந்த சம்பிரதாயத்தையும் சேராதவர்கள்). அவர் ராஜபுதனம் முழுக்க நூற்றுக்கணக்கான கல்விக் கூடங்களையும், தர்மப் புகலிடங்களையும் நிறுவக் காரணமானவர். அவர் காடுகளில் மருத்துவ மனைகளைத் திறந்திருக்கிறார். இமயமலைப் பள்ளத்தாக்குகளில் பாலங்கள் கட்டியுள்ளார் அவர். இந்த மனிதர் பணக் காசுகளைத் தன் கையால் தொடுவதே இல்லை. ஒரு கம்பளியைத் தவிர அவருக்கு வேறு மண்ணுலகச் சொத்துக்கள் எதுவுமே இல்லை. அவருக்கு ''கம்பளி சுவாமிகள்'' என்று செல்லப்பெயர் கூட உண்டு. அவர் வீடுவீடாகச் சென்று உணவைப் பிச்சையாக எடுப்பார். அவர் தன் முழுச்சாப்பாட்டையும் ஒரு வீட்டில் பெற்று நான் அறியேன் எந்த ஒரு வீட்டினருக்கும் அளவுக்குமீறிய சுமையாக ஆகிவிடக்கூடாது என்பது அவர் கொள்கை. இவரைப் போல் இன்னும் எத்தனையோ பேர் இருக்கிறார்கள் இன்னும். இந்த மாதிரி மண்ணில் வாழும் தெய்வங்கள் இந்தியாவில் வாழ்ந்து சனாதன தருமத்தைக் காக்கும் வரை இத்தகைய தெய்வ புருஷர்களையே தகர்க்க முடியாத தன் அரணாகக் கொண்ட பழைய சமயம் எப்படிச் சாகும்?''

சுவாமிஜி பத்ரிநாத் செல்ல வேண்டும் என்றும் அங்கு நிர்விகல்ப சமாதி அடையவேண்டும் என்றும் விரும்பினார். அந்த ஆசையை இச்சொற்களில் வெளிப்படுத்தினார் ''நண்பர்களே, ஒருக்கால் நான் திட்டமிட்டபடி அது நிறைவேறாமல் போகலாம். யாருமறியா அந்த நிசப்தம் எனக்கு கிடைத்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்''. இமயமலை தடுக்க முடியாமல் விவேகானந்தரைக் கவர்ந்திழுத்தது. இன்னொரு தடவை தடைகளை உடைத்தெறிய அவர் முயன்றார். ஒருநாள் தன் சீடர் உணவு சமைத்துக் கொண்டிருக்கும்போது அவர் திடீரென விலகி நடந்து விட்டார். சில மைல் தூரம் சென்ற உடன் சரத் மீது அவர் கொண்ட அன்பு அவரைத் திரும்ப அழைத்து வந்து விட்டது.

சீடருக்கோ அந்த பயணம் மிகவும் கடினமானதாக இருந்தது. அவர் சுகவாழ்வுக்குப் பழகிப் போனவர். சன்னியாசியின் கடினமான, தொடர்ந்த தவ வாழ்க்கை நிச்சயமின்மையும், கஷ்டங்களும் நிறைந்து இருப்பதைக் கண்டார். பிற்பாடு சரத் கூறினார். ''பசியாலும் தாகத்தாலும் நான் மயங்கி விழுந்தேன். சுவாமிஜி என்னைக் கவனித்துக் கொண்டார். என்னைச் சாவிலிருந்து அவர் தான் காப்பாற்றினார். இன்னொரு தடவை அவர் குதிரையைப் பற்றி ஒரு மலை அருவியின் மடுவில் குறுக்கே அழைத்துச் சென்றார். அது ஆபத்தானது, வேகமானது, தரை வழுக்குவது. எனக்காக அவர் பலதடவை தன்னுயிரை ஆபத்தில் சிக்க வைத்தார். அன்பு, அன்பு என்ற ஒரு சொல்லைத்தவிர வேறு எவ்விதம் அவரை நான் வருணிப்பேன் நண்பர்களே! ஒருதடவை நான் தள்ளாடி நடப்பதைத் தவிர வேறொன்றும் செய்ய முடியாத அளவுக்கு நோய்வாய்ப்பட்டிருந்தேன். அப்போது அவர் என் பாதணி உட்பட என் சொந்தச் சாமான்கள் அனைத்தையும் சுமந்து வந்தார்''.

அவர் பத்ரிநாத் சென்றடையவிடாமல் யாரோ, எதுவோ வழிமறிப்பது போலிருந்தது. சீடர் தீவிர நோய்வாய்ப்பட்டார். சுவாமிஜி சிகிச்சைக்கென அவரை ஹாத்ரஸ் அழைத்துப்போக வேண்டியதாயிற்று. அவருக்கே வேறு மலேரியா வந்து மலைகளில் அவர் பலவீனமுற்றார். ஹாத்ரஸிலிருந்து அவர் வரநகர் மடம் திரும்பினார்.

## காட்சி மேடை - 8

**வரநகர்**

1888 இறுதியில் சுவாமிஜி வரநகர் மடம் திரும்பி வந்தார். அங்கே அவர் ஓராண்டு தங்கி இருந்தார். (நடுவில் கொஞ்ச

காலம் மட்டும் பீஹாரில் உள்ள சாந்தால் பர்கணாவில் உள்ள சிமுல்தலாவுக்கு 1889 கோடையில் தன் உடல் நலத்தைத் தேற்றிக் கொள்வதற்காகச் சென்று வந்தார்.)

அவர் ஆர்யாவர்த்தத்துக்கு இருமுறை சென்று வந்தது அவர் கண்முன் பெரும் வாய்ப்புள்ள காட்சிகளைத் திறந்து காட்டிற்று. காலத்தையே அவர் கடந்து வாராணசி சென்றிருக்கின்றார். ராமராஜ்யத்தை தரிசித்திருக்கின்றார். ராஜசிக முகலாயர்களின் மகத்தான நினைவுச் சின்னங்களின் இடையே நின்றிருக்கிறார். பகவானின் விளையாட்டு மைதானமாகிய பிருந்தாவனத்தில் பக்தியுடன் நின்றிருக்கிறார். கடைசியில் அசையாத சாசுவதமான இமயமலையின் முன், அது தன்னுள் வந்து சாந்தியின் உறைவிடத்தைக் காணுமாறு தன்னை அழைப்பதை நேருக்கு நேர் நின்று கண்டிருக்கிறார்.

இவை எல்லாம் எதனைச் சுட்டிக்காட்டின? குருநாதர் சுவாமிஜிக்குக் காட்டிய வழியில் சென்று அவர் அடைய, உணர வேண்டிய ஒருங்கிணைந்த சத்தியத்தைச் சுட்டிக் காட்டின. இதற்கென சுவாமிஜி ஞானம், முயற்சி, அன்பு என்ற தன் சக்திகளை முழுவதுமாக வெளிப்படுத்தியாக வேண்டும். பாரதத்தின் இதப்பகுதிக்கு தான் இருமுறை சென்று வந்தபோது தன்னுள் இச்சக்திகள் விழித்தெழுவதை சுவாமிஜி கண்டார்.

சின்னஞ்சிறு வரநகர் மடமும் வளர்ந்தாக வேண்டுமே! தினப்படி வழிபாடு யோகப்பயிற்சி இவற்றுடனே சாத்திரம் ஓதுதல், வேதம், உபநிஷதம் ஓதுதல் இவற்றையும் மேற்கொள்ள வேண்டும். வரநகர் மடத்தில் அவர் ஓராண்டு தங்கிய போது, நாள்தோறும் நிறைய பணிகளைச் செய்தார். வாராணசி, பாபு பிரமததாஸுக்கு அவர் எழுதினார்.

''வங்காளத்தில் வேதம் ஓதும் பழக்கம் விட்டே போய் விட்டது எனலாம். மடத்தில் இங்கே பலருக்கு சம்ஸ்க்ருதம் தெரியும். வேதத்தின் சம்ஹிதைப் பகுதியை அவர்கள் நன்கு கற்றிருக்கிறார்கள். செய்வதை நன்கு செய்து முடிக்கவேண்டும் என்று அவர்கள் கருதுகின்றார்கள். பாணினியின் இலக்கணத்தை முதலில் நன்கு பயிலாமல் வேதபாஷையை பாண்டித்தியம் பெற இயலாது. இதற்குப் பாணினியின் இலக்கணம்தான் மிகவும் பயனுள்ளது. அதன் ஒரு பிரதி வேண்டும். மடத்தில் நிறைய விடாமுயற்சியும், திறமையும், கூர்மதியும் உள்ளவர்கள் இருக்கின்றார்கள். அவர்கள் விரைவிலேயே பாணினியின் முறை

யைக் கற்றுத் தேர்ந்து வங்காளத்தில் வேதப்படிப்பைத் திரும்பவும் கொணர்வதில் வெற்றி பெறுவார்கள்.'' அவருடைய வேண்டுகோளின் பேரில் பிரமததாஸ் மித்ரா மடத்துக்குத் தன் பிரதி பாணினிஇலக்கணத்தைக் கொடுத்துதவினார் வேதாந்த இலக்கிய நூல்களையும் தந்துதவினார். கொஞ்சகாலம் கழித்து சுவாமிஜி பிரமததாஸ் மித்ராவுக்கு எழுதினார். ''நீண்டகால முயற்சிக்குப் பிறகு உங்கள் முன்வர நான் இப்போது தயாராக இருக்கிறேன். அங்கே கொஞ்சகாலம் தங்க எண்ணியுள்ளேன். விசுவநாதரும் அன்னபூரணியும் எனக்கு என்ன வழிகாட்டுகின்றார்கள் என்று பார்ப்போம். என் தீர்மானம் ''செய் அல்லது செத்துமடி'' என்பதாகும். காசி ஈசுவரன் எனக்கு அருள்வாராக..........''.

## கடிதம் 2

### சுவாமிஜி பிரமததாஸ் மித்ராவுக்கு எழுதிய கடிதம்

பகவான் ராமகிருஷ்ணருக்கு ஜே! வரநகர் மடம்,
19 நவம்பர் 1888.

மரியாதைக்குரிய ஐயா.

தாங்கள் அனுப்பி வைத்த இரு புத்தகங்களும் கிடைத்தன. தங்களுடைய அற்புத அன்பு நிறைந்த கடிதம் கிடைத்து மகிழ்ச்சியில் மூழ்கினேன். அவை தங்கள் பரந்த, தாராள இதயத்தைக் காட்டுகின்றன. என்னைப்போன்று பிச்சை எடுத்துவாழும் ஒருவன்மீது தாங்கள் இவ்வளவு அன்பு செலுத்துவது என் முன் பிறவிப் புண்ணியமே. 'வேதாந்தத்'தைப் பரிசாக அனுப்பித் தாங்கள் என்னையும் ஸ்ரீராமகிருஷ்ண சன்னியாசிக் கூட்டம் அனைத்தையும் தங்களுக்கு நன்றிக்கடன் பட்டவர்கள் ஆக்கி விட்டீர்கள். நாங்கள் எல்லோரும் தங்களுக்கு மரியாதையுடன் வணக்கம் செலுத்துகிறோம். நான் பாணினி இலக்கண நூலின் ஒரு பிரதியைத் தங்களிடம் கேட்டது எனக்காக மட்டும் அல்ல. இந்த மடத்தில் சமஸ்கிருத சாஸ்திரம் படிப்பவர்கள் நிறைய உண்டு. வங்காளத்தில் வேதம் ஓதும் வழக்கம் ஒழிந்தே விட்டது எனலாம். இம்மடத்தில் பலருக்கு சமஸ்கிருதம் நன்கு தெரியும். வேதத்தின் சம்ஹிதைப் பகுதியை நன்கு பயில அவர்கள் விரும்புகிறார்கள். செய்வதைப் பூரணமாகச் செய்யவேண்டும் என்பது அவர்கள் கருத்து. முதலில் பாணினி இலக்கணம் பயிலாமல் வேதபாஷையில் பாண்டித்தியம் பெறுவது இயலாது என்பதால், இவ்விலக்கணப் புத்தகம் தேவைப்பட்டது. இத்துறையில் மிக நல்ல புத்தகம் அதுதானே! நாங்கள் சிறுவர்களாக இருந்தபோது பயின்ற 'முக்தபோதம்' என்ற இலக்கண நூல் பல அம்சங்களில் லகு கௌமுதியைவிடச் சிறந்தது. ஆழ்ந்து கற்றவராகிய

நீங்கள்தான் இவ்விஷயத்தில் நல்ல முடிவு எடுக்க முடியும். எங்களுக்கு அஷ்டாத்யாயி (பாணினி இலக்கணம்) பொருத்தமானது என்று நீங்கள் கருதினால், அதனை எங்களுக்கு அனுப்பி வைத்தால், ஜீவன பரியந்தம் நாங்கள் உங்களுக்கு நன்றிக்கடன் பட்டவர் ஆக இருப்போம். மடத்தில் விடாமுயற்சி, திறமை, கூர்ந்தமதி கொண்ட மனிதர்கட்குக் குறைவில்லை. எங்கள் குருநாதரின் கருணையினால் விரைவிலேயே இவர்கள் பாணினி இலக்கணத்தைக் கற்றுத் தேர்ந்து விடுவார்கள். வங்கத்தில் வேத அத்யயனத்தைத் திரும்பக் கொண்டு வருவார்கள். எங்கள் பூஜ்ய குருநாதரின் இரண்டு புகைப்படங்களையும் இத்துடன் அனுப்பியுள்ளேன். ஒரு கனவான் எங்கள் குருநாதரின் உபதேசங்களில் எளிமையாக இருப்பவற்றைத் தொகுத்து வெளியிட்டுள்ளார். இரண்டு பாகங்களை இத்துடன் அனுப்பி உள்ளேன். ஏற்றுக் கொள்ளுங்கள். என் உடல்நிலை முன்னேறியுள்ளது. இரண்டு மூன்று மாதங்களில் தங்களைச் சந்திக்கிற பாக்கியம் கிட்டுமென நம்புகிறேன்.

பிரமததாஸ் மித்ராவுக்கு வாராணசிக்கு எழுதியது,

தங்கள்,
விவேகானந்தர்

## அலாஹாபாத்

வாராணசி செல்லும் வழியில் சுவாமி விவேகானந்தர் யோகானந்தர் என்ற சகோதரச் சீடர் நோய்வாய்ப்பட்டபோது பணிவிடை செய்வதற்காக அலஹாபாத் சென்றார். யோகானந்தருக்கு அம்மைநோய் வந்திருந்தது. அலஹாபாதில் சுவாமிஜி ஒரு முஸ்லீம் முனிவரைத் தரிசித்தார். ''அவருடைய முகத்தில் ஒவ்வொரு கோடும், வளைவும் அவர் ஒரு பரமஹம்ஸர் என்பதைக் காட்டிற்று''. இங்குதான் சுவாமிஜி காஜிப்பூரில் புகழ்பெற்ற முனிவரான பவஹாரி பாபாவைப் பற்றிக் கேள்விப்பட்டார். அடுத்து நாம் சுவாமிஜியை காஜிப்பூரில் சந்திப்போம்.



# காட்சி மேடை - 9

## காஜிப்பூர்

ஒரு சமயம் பவஹாரி பாபாவின் அலைந்து திரியும் வாழ்க்கைப் பகுதியைப் பற்றிப் பேசும்போது சுவாமிஜி இந்த அனைவரும் அறிந்த கவிதை வரிகளைப் பாடினார்.

''ஓடும் நீரே தூய்மையாக இருக்கும்
அலையும் துறவியே அழுக்கின்றி இருப்பார்''

சுவாமிஜி கூறினார்: ''பொது விதி என்னவென்றால் பாரத நாட்டில் சமய வாழ்க்கையை மேற்கொள்பவர்கள் தம் வாழ்க்கையில் பெரும்பகுதியை யாத்திரை செய்வதிலேயே கழிக்கின்றார்கள். தான் துருப்பிடித்துப் போகாமலும் பார்த்துக்கொள்கிறார்கள். அதேசமயத்தில் பொதுமக்களுடைய வீட்டு வாசலுக்கு சமய போதனைகளைக் கொண்டு செல்லும் பணியையும் ஆற்றுகின்றார்கள். அதில் முக்கிய நோக்கம் ஞானத்தாகம் தான்.''

காஜிப்பூரில் சுவாமிஜி கொஞ்சகாலம் சதீஷ் சந்திர முகர்ஜியுடன் தங்கினார். ராய் ககன் சந்திர பஹாதூர் என்ற அன்பரின் இயற்கையான கண்ணியமும் ஆன்மீகமும் அவரை அனைவருக்கும் பிரியமானவராகச் செய்தன. அவர் சுவாமிஜியை பவஹாரிபாபாவுக்கு அறிமுகப்படுத்தி வைத்தார். சுவாமி விவேகானந்தர் பவஹாரிபாபாவைப் பற்றி மிக உயர்ந்த அபிப்ராயம் கொண்டார். பாபாவை அவர் ''யோகம், பக்தி, பணிவு இவற்றின் உருவம்'' என்று வர்ணித்தார்.

பவஹாரிபாபா அந்தணப் பெற்றோரின் மகனாக வாராணசிக்கு அருகில் பிறந்தார். காஜிப்பூரில் தன் சித்தப்பாவுடன் (?) வந்து தங்கிப் படிக்க ஆரம்பித்தார் இளமையிலேயே அவர் ஹிந்து தத்துவத்தின் பல பிரிவுகளை நன்கு கற்றார். தன் சித்தப்பாவின் மரணம் இளைஞனின் சிந்தனையை உள்முகமாகத் திருப்பிற்று. அவர் பிரம்மசரிய விரதம் பூண்டார் உலகைத் துறந்து தவவாழ்க்கை மேற்கொண்டு பாரதத்தின் பல பகுதிகளில் சுற்றி அலைந்தார். பயணத்தினூடே அவர் காட்டியவாடு பகுதியில் கிர்நார் மலைஉச்சிக்குச் சென்றார். அங்கே அவர் யோகதீட்சை பெற்றுக் கொண்டார்.

கடைசியில் அவர் தம் புனிதப் பயணங்களிலிருந்து காஜிப்பூர் திரும்பி அங்கே தங்கினார். கங்கைக்கரையில் தரைக்

கடியில் ஒரு பொந்து தோண்டி அதற்குள்ளேயே தன் நேரத்தின் பெரும் பகுதியைத் தியானத்தில் செலவழித்தார். அவர் எதுவுமே உண்பதில்லை. அவருக்கு பவஹாரி பாபா (காற்றையே உண்டு வாழும் முனிவர்) என்ற பெயர் வழங்கலாயிற்று. பாபா ஆசிரமத்தை விட்டு வெளியே செல்வதே இல்லை. ஒரு கதவுக்குப் பின்னால் இருந்து தான் மக்களோடு பேசுவது அவர் வழக்கம். பவஹாரி பாபா ஸ்ரீராமகிருஷ்ணரைப் பற்றி அறிந்திருந்தார். அவரை பாபா கடவுளின் அவதாரமாக ஏற்றுப் பெரும் மதிப்புக் கொடுத்திருந்தார். அவருடைய அறைச்சுவரில் ஸ்ரீராமகிருஷ்ணரின் படம் ஒன்று தொங்கிக் கொண்டிருந்தது.

சுவாமி விவேகானந்தர் பாபாவைச் சில தடவைகள் தரிசனம் செய்தார். பாபா பணிவு மிக உடையவர். சுவாமிஜியின் கேள்விகட்கு 'இந்த அடிமைக்கு என்ன தெரியும்' என்று கூறி விடைதராமல் மழுப்பி விட்டார். பிறகு வற்புறுத்தலின் பேரில் ''சில நாட்கள் இங்கே தங்கி எனக்கு உபகாரம் பண்ணுங்கள்'' என்றார்.

சுவாமி விவேகானந்தர் தன் சகோதரத் துறவி ஒருவருக்கு எழுதிய கடிதத்தில் ''இப்போது நான் இந்த ஊர் அற்புத யோகி, பக்தர் ஒருவருடன் தங்கி இருக்கிறேன். பவஹாரி பாபா என்பது அவர் பெயர். அவர் பல மாதங்கள் தொடர்ந்து சமாதி நிலையில் இருப்பதுண்டு என்று பேசிக் கொள்கிறார்கள். அவருடைய வைராக்கியம் ஆச்சரியகரமானது. நமது வங்கம் பக்தியும் ஞானமும் தழைக்கும் பிரதேசம். அங்கே யோகம் பற்றி அரிதாகத்தான் பேசுகின்றார்கள். ஆகவே, நான் இந்த அற்புதமான ராஜயோகியுடன் தங்கியிருக்கிறேன். அவர் எனக்கு நம்பிக்கையூட்டும் வண்ணம் செயல்கள் சில செய்திருக்கிறார். என் லட்சியம் என்னவென்றால் நான் செல்லும் வழியில் நல்லது எதைக் கண்டாலும் அதைக் கற்க வேண்டும் என்பதுதான். நண்பர்களே! இது என் குருநாதர் மீது நான் வைத்த பக்தியிலிருந்து தடம் புரண்டு போக வைத்துவிடும் என்று யாராவது எண்ணினால் அவ்வாறு கருதுபவர்களை நான் பைத்தியங்கள் என்பேன், வெறியர்கள் என்பேன். ஏனெனில் எல்லா குருமார்களும் ஒருவரே. உலகளாவிய குருவாகிய கடவுளின் அம்சங்களும், கதிர்களுமே அனைத்துக் குருமார்களும்''.

சுவாமிஜி பவஹாரிபாபாவிடம் தீட்சை வாங்கிக்கொள்ளும் நிலையில் இருந்தார். அந்த சமயத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர் தன் அருகே நிற்பது போன்ற 'காட்சி' அவருக்குக் கிடைத்தது. இக்காட்சி 21 நாட்களுக்குத் திரும்பத் திரும்பத் தென்பட்டது. சுவாமிஜி தன் மனத்தை மாற்றிக் கொண்டு வாராணசி சென்றார். தாம் உயிரோடு இருந்த வரையில் சுவாமிஜி பவஹாரி பாபாவிடம் மனப்பூர்வமான அன்பும் மரியாதையும் கொண்டிருந்தார். பாபாவின் இரண்டு உபதேசங்களைக் குறிப்பாக சுவாமிஜி நினைவு கொண்டிருந்தார்:- ''உன்னுடைய குருநாதரின் இல்லத்தில் ஒரு பசுமாட்டைப்போல் வாழ்ந்திரு, ஆன்மீக வாழ்க்கையின் கட்டுப்பாட்டினை வாழ்க்கையின் லட்சியத்தை மதித்து நடப்பது போலவே மதித்து நட.''

**கடிதம் – 3** காஜிப்பூர்,
7—2—1890.

பிரமததாஸ் மித்ராவுக்கு சுவாமி விவேகானந்தர் எழுதியது,
அன்புள்ள ஐயா,

தங்கள் கடிதம் இப்போதுதான் வந்து சேர்ந்தது; மகிழ்ச்சி. புறத்தோற்றத்தை வைத்துப் பார்க்கும்போது பாபாஜி ஒரு வைஷ்ணவர் என்று கருதுகிறேன். அவரை யோகம், பக்தி, பணிவு இவற்றின் உருவகம் எனலாம். அவர் வசிக்குமிடத்தில் எல்லாப் பக்கமும் சுவர்களும் ஒருசில கதவுகளும் இருக்கின்றன. இச்சுவர்கட்குள்ளே, ஒரு நீண்ட தரையடி வளை அல்லது பொந்து இருக்கின்றது. அதில்தான் அவர் சமாதியில் கிடக்கிறார். அவர் அந்த பொந்திலிருந்து வெளியே வரும்போதுதான் பிறருடன் பேசுகின்றார். அவர் என்ன உணவு உண்கிறார் என்று யாருக்கும் தெரியாது. அதனால் அவரை பவஹாரிபாபா என்கின்றார்கள். ஒரு சமயம் அவர் ஐந்து ஆண்டுகள் அந்தப் பொந்திலிருந்து வெளியே வரவே இல்லை. மக்கள் அவர் உடலை விட்டு விட்டார் என்றே கருதினார்கள். ஆனால், இப்போது மறுபடியும் அவர் வெளியே வருகிறார். ஆனால், இப்போது அவர் மக்கள் முன் தன்னை வெளிக்காட்டிக் கொள்வதில்லை. கதவுக்குப் பின்னாலிருந்து பேசுகிறார். அந்த மாதிரி இனிய பேச்சை நான் கேட்டதே இல்லை. கேள்விகட்கு அவர் நேரிடையாகப் பதில் அளிப்பதில்லை. ''இந்த அடிமைக்கு என்ன தெரியும்?'' என்கிறார். ஆனால், உரையாடல தொடரும் போது சுடர் வெளியே தோன்றுகின்றது. நான் வற்புறுத்தியபோது ''இங்கே சில நாட்கள் தங்கி எனக்கு உபகாரம் பண்ணுங்கள்'' என்றார். ஆனால், அவர்

இந்த மாதிரி ஒருபோதும் பேசுவதில்லையாம். இதிலிருந்து எனக்கு நம்பிக்கை ஊட்டவே அவர் இவ்வாறு பேசினார் என்று கருதிக் கொண்டேன். நான் வற்புறுத்தும் போதெல்லாம், என்னைத் தொடர்ந்து தங்கும்படி அவர் கூறுகிறார். அதனால் நான் நம்பிக் கையுடன் காத்திருக்கின்றேன். அவர் கற்றறிந்தவர் தான் ஐய மில்லை. ஆனால் அவர் அதை வெளிக்காட்டிக் கொள்வதில்லை. அவர் சாத்திரச் சடங்குகள் புரிகிறார். பௌர்ணமியிலிருந்து, மாதக் கடைசி வரை ஹோமம் செய்யும் பணி தொடர்ந்து நடக்கின்றது. அதனால் இந்தக் காலக்கட்டத்தில் அவர் தன் பொந்துக்குள் போய்விடுவதில்லை என்பது உறுதி. அவரிடம் எப்படி அனுமதி பெறுவது? அவர் ஒருபோதும் நேரிடையாகப் பதில் சொல்வதில்லை. 'இந்த அடிமை என் பாக்கியம்' என்பது போன்ற வார்த்தைகளைத் திருப்பத் திரும்பக் கூறுகின்றார். உங்களுக்கு வரவேண்டும் போலிருந்தால், இக்கடிதம் கிடைத்தவுடன் புறப்பட்டு வாருங்கள். இல்லாவிட்டால் அவர் மறைந்த பின் உங்கள் மனத்தில் ஆழ்ந்த வருத்தம் எஞ்சி நிற்கும். நீங்கள் அவரிடம் இடையிடையே பேசி சந்திப்பை முடித்துக்கொண்டு இரண்டு நாளில் திரும்பி விடலாம். என் நண்பர் சதீஷ்பாபு தங்களை அன்புடன் வரவேற்று உபசரிப்பார். ஆகவே இக்கடிதம் கிடைத்தவுடன் புறப்பட்டு வாருங்கள். இதனிடையே பாபாஜியிடம் உங்களைப் பற்றிச் சொல்லி வைக்கிறேன்.

தங்கள்,

**விவேகானந்தர்.**

## காட்சி மேடை - 10

**வாரணசி**

சுவாமி அபேதானந்தர் இமய மலையில் புனிதப் பயணம் செய்துவிட்டு வந்து வாரணாசியில் நோயுற்றுப் படுத்துவிட்டார். சுவாமிஜி முதலில் அவரைக் கவனித்துவிட்டு பிறகு பிரமத தாஸின் தோட்டத்தில் தங்கினார். கல்கத்தாவை விட்டுப் புறப்பட்டதும் தாம் முதலில் செய்ய வேண்டியதாகத் தீர்மானித்தபடி தன் நேரம் முழுவதையும், தவத்திலும் விரதங்களிலும் செலவழித்தார்.

அவருடைய தனிமையைக் கலைக்கும் செய்தியொன்று வந்தது. கல்கத்தாவில் ஸ்ரீராமகிருஷ்ணரின் இல்லறச் சீடரான பெரியவர் பலராம் போஸ் கடுமையான நோயுற்றிருப்பதான செய்தி அது. இச்செய்தி கிடைத்து, விவேகானந்தர் வருத்தம்

அடைந்த விதத்தைப் பார்த்த பிரமததாஸ், ஒரு தீவிர வேதாந்தி, ஒரு மனிதர் சாகக் கிடப்பது பற்றிய செய்தி கிடைத்து இவ்வளவு மனம் கலங்கிப்போய் விட்டது பற்றி ஆச்சரியப்பட்டார்.

சுவாமிஜி பதிலிறுத்தார்: ''நாங்கள் காய்ந்து வறண்டுபோன துறவிகள் அல்ல. உலகைத் துறந்து விட்டதலால் எங்களுக்கு எல்லா உணர்ச்சிகளும் மரத்துப் போய்விட்டன என்று கருதி விட்டீர்களா?''

## காட்சி மேடை - 11

### கல்கத்தா

பலராம் போஸ் மரணம் அடைவதற்கு முன்னர் அவர் படுக்கையருகில் இருப்பதற்காக சுவாமி விவேகானந்தர் கல்கத்தா வந்து சேர்ந்தார். சில நாட்களுக்குள்ளே, சுரேந்திரநாத் மித்ரா என்ற இன்னொரு பக்தரும் காலமானார். அவருடைய மரணத் திற்குப் பிறகு ஆசிரமம் பணப் பிரச்சினைகளை எதிர்நோக்க வேண்டியிருந்தது. ஏனெனில் ஆரம்பத்திலிருந்தே சுரேந்திரநாத் மடத்தின் செலவுகளை ஏற்றுக் கொண்டிருந்தார். இருப்பினும் தியானம், பிரார்த்தனை இவற்றின் பலம் துறவிகளைத் தாங்கிப் பிடித்துக் கொண்டது. விவேகானந்தர் தியானமும் பிரார்த்தனை களும் செய்ததுடன் தன் சகோதரத் துறவிகளை வழிநடத்தும் பணியிலும் தீவிரமாக ஈடுபட்டார். இந்தக் காலகட்டத்தில் தான் ஒரு சமயம் ஸ்ரீராமகிருஷ்ணரின் புனித அஸ்தி முதலிய வற்றைப் பாதுகாப்பதற்காக நிரந்தரமான கோயில் ஒன்றைக் கட்டும் யோசனையை அவர் மேற்கொண்டார். ''பல்வேறு காரணங்களினால் ஸ்ரீராமகிருஷ்ணரின் பூத உடல் அக்னி வசமாக்கப்பட்டது. இந்தக் காரியம் மிகவும் நிந்தனைக்குரியது தான், சந்தேகமில்லை. அவருடைய அஸ்தி (புனிதச் சாம்பல்) யாவது பாதுகாக்கப்பட்டுள்ளது. அவற்றை கங்கைக்கரையில் எங்காவது தகுந்த முறையில் கோவில் கட்டிப் பாதுகாத்து விட்டால் நம் தலைமீது சுமந்திருக்கும் பாவத்தின் ஒரு பகுதி யாவது தொலைந்துபோகும் என்று கருதுகிறேன்.''

வங்காளத்தில் கல்வி கற்றவர்கள் வாழுகின்ற துக்ககரமான நிலைமையைப் பார்த்தும் விவேகானந்தர் மனம் கலங்கினார். ''இங்குள்ள ஜனங்கள் தியாகம் என்றால் உண்மையில் என்ன

வென்று கனவு கூடக் காணத் தெரியாதவர்கள். வீண் ஆடம்பரம், புலனின்பம், சுயநலம் இவை இவ்வினத்தின் ஜீவ சத்தை உறிஞ்சிக் கொண்டிருக்கின்றன. இந்த நாட்டில் கடவுள் தியாக உணர்வையும் பரஉலகச் சிந்தனைகளையும் உண்டாக்குவாராக.''

## காட்சி மேடை - 12

### வரநகர்

வரநகர் மடத்தில் சுவாமி விவேகானந்தர் சிறைப்பட்டவர்போல் தம்மை உணர்ந்தார். நாட்கள் செல்லச் செல்ல அவர் உறவுகள் பொறுப்புக்கள் என்ற வலைகளில் சிக்குண்டு இருப்பதாக உணர்ந்தார். எல்லாப் பக்கங்களிலிருந்தும் அவருடைய சமயம், கவனம் இவற்றைப் பலர் கோரிக்கொண்டே இருந்தார்கள். இவை அனைத்தும் அலையும் துறவியாக அவர் வாழ்க்கையை மேற்கொள்ள விடாமல் அவரைத் தடுத்தன. அலையும் துறவி வாழ்க்கையை மேற்கொண்டு தன்னம்பிக்கை மிகுந்தவராகவும், தான் செய்யவேண்டிய உபதேசங்களை நன்குணர்ந்தவராகவும் ஆகமுடியாமல் தன்னை இவை தடுப்பதாக உணர்ந்தார். அவர் பணியில் முனைந்து ஈடுபடவேண்டும், தியானம் பண்ண வேண்டும், தன் ஆன்மீகப் பிரச்சினைகள் அனைத்துக்கும் முடிவுகாண வேண்டும், தான் பிறந்த தாய்நாட்டின் பிரச்சினைகட்கு முடிவு காணவேண்டும்.

உலகம் அவரைப் பணியாற்ற வரும்படி அழைத்தது. 1890-இல் ஒருநாள் திரும்பியே வருவதில்லை என்ற பழைய சங்கல்பத்துடன் அவர் மடத்தைவிட்டுப் புறப்பட்டார். இமய மலைக்குச் சென்று தன் சிந்தனைகளின் ஆழத்தில் தன்னைத் தானே புதைத்துக் கொள்ள அவர் விரும்பினார். ஒரு சகோதரத் துறவியிடம் அவர் கூறினார்:- ''நான் ஒருவனைத் தொட்டாலே அவன் அடியோடு மாறிவிடுகின்ற அளவுக்கு தெய்வீக உண்மையை நான் உணராத வரையில் நான் திரும்பியே வரமாட்டேன்''.

வரநகர் மடத்தைவிட்டுப் புறப்படுமுன் சுவாமி அகண்டானந்தருடன் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் துணைவியாராகிய தூய அன்னையாரின் ஆசிகளைப் பெறுவதற்கு சுவாமி விவேகானந்தர் சென்றார். தூய அன்னையாரிடம் தன் தீர்மானத்தைச் சொன்னார். ஸ்ரீராமகிருஷ்ணரின் பெயரால் அன்னையார் சுவாமிஜியை ஆசீர்வதித்தார்; பெற்ற அன்னையாரிடம் விடை பெற வேண்டாமா என்று கேட்டார். சுவாமிஜி பதிலிறுத்தார்:-

''அன்னையே! நீங்கள்தான் என்னுடைய ஒரே தாய்.''

இமயமலைப் பகுதியில் நிறைய அனுபவமுள்ள சுவாமி அகண்டானந்தர் விவேகானந்தருடன் கூடச் செல்லப் போகிறார் என்று அறிந்து தூய அன்னையார் ஆறுதல் அடைந்தார். கண்களில் நீர் பெருக அன்னையார் சுவாமி அகண்டானந்தரைப் பார்த்துக் கூறினார்: ''நம்முடையது எல்லாவற்றையும் உன் கையில் ஒப்படைக்கிறேன். அவனுடைய உணவைக் கவனமாகப் பார்த்துக்கொள்''. சுவாமி அகண்டானந்தருடன் சுவாமி விவேகானந்தர் 1890 ஜூலையில் கல்கத்தாவிலிருந்து வட இந்தியா நோக்கிப் புறப்பட்டார்.

## காட்சி மேடை 13

**பாகல்பூர்:**

1890 ஆகஸ்டில் சுவாமி அகண்டானந்தர் உடன்வர சுவாமி விவேகானந்தர் பாகல்பூர் வந்து சேர்ந்தார். அவர்கள் கங்கை போகும் வழியில் சென்றனர். பாகல்பூர்தான் அவர்கள் முதலில் தங்கிய இடம். அவர்கள் மன்மத சௌதரியின் இல்லத்தில் தங்கினார்கள். தீவிர பிரம்ம சமாஜியான மன்மதபாபு பல விஷயங்கள் பற்றி சுவாமி விவேகானந்தருடன் பலதடவை விவாதித்தார். மன்மதபாபு தன் நண்பருக்கு எழுதிய கடிதம் ஒன்றில் சுவாமிஜியின் பல புதிய கருத்துக்களுள் இரண்டு அவர் மனத்தில் ஆழப்பதிந்தன என்றார் ''பழைய சூரியஞானத்தில் அறிவில், சிறப்பறிவில் எஞ்சியிருப்பது கங்கைக்கரையில் உள்ள பகுதிகளில்தான் அதிகம் காணக்கிடைக்கின்றது; சாது ஹிந்து என்பது, வகைச்சொல்லாகக் கருதப்படாமல் நம் புகழையும், நம் குணநலன்களின் பெருமையையும் சுட்டிக்காட்டுவதாகக் கருதப்பட வேண்டும். ஒரு மனிதன் தன் இயல்பில் இருக்கும் மிருக சக்தியை ஒழித்துக்கட்டுவதற்கு முன்னால் எவ்வளவு ஒழுக்க, ஆன்மீக முன்னேற்றம் அடையவேண்டும். அன்பு, கருணை ஆகிய குணங்களை எவ்வளவு வளர்த்துக் கொண்டாக வேண்டும்! இந்த மிருக இயல்பு தானே சுயடகத்துவம் பெறுவதற்காக ஒரு மனிதன் தன் சகோதரனையே கொல்லும்படி செய்கிறது!''

யோகம், உபநிஷதங்கள் பற்றி சுவாமிஜி பேசியது மன்மத பாபுவை மிகவும் கவர, அவர் சுவாமிஜியுடன் பிருந்தாவனம் சென்று அங்கு சாதனையில் ஈடுபடவேண்டும் என்று விருப்பம் தெரிவித்தார். ''தன் பாதை வேறுவிதமாக வகுக்கப்பட்டிருக்கின்றது'' என்றார் சுவாமிஜி. மன்மதபாபுவின் இல்லத்தில் திறமைமிகு இசைக்கலைஞர்களின் முன்னிலையில் பாடி அவர்களைச் சொக்க வைத்தார்.

ஒருநாள் மன்மதபாபு வீட்டுக்கு வெளியே சென்றிருந்த போது விவேகானந்தர் தன் குருபாயியுடன் அமைதியாக வெளியேறித் தம் பயணத்தைத் தொடர்ந்தார்.

## வைத்யநாத் தாம்

சுவாமி அகண்டானந்தாவின் வேண்டுகோளுக்கு இணங்க விவேகானந்தர் அடுத்தபடியாக வைத்யநாத் தாமுக்குப் போனார். அங்கு பாபுராஜ் நாராயண்போஸின் இல்லத்தில் ஓர் இரவு தங்கியிருந்தார்.

போஸ் அனுபவம் வாய்ந்த ஒரு சமூக சீர்திருத்தவாதி. தேசிய உணர்வுக்கு தலைவர். அவரைப் பாரத தேசியத்தின் பாட்டனார் என்றழைப்பார். அவர்கள் இருவரும் பல விஷயங்கள் குறித்துப் பேசினார்கள். இருவரும் முழுவதும் வங்காளியிலேயே உரையாடினார்கள். மிகக் கவனத்துடன் ஆங்கில மொழியைத் தவிர்த்தார்கள். எந்த அளவுக்கு என்றால் 'பிளஸ்' என்ற ஆங்கிலச் சொல்லைப் பயன்படுத்த வேண்டிய கட்டாயம் வந்தபோது விரல்களை ஒன்றின் குறுக்கே ஒன்றை வைத்துச் சைகைகாட்டி இந்த இக்கட்டினைத் தவிர்த்தார்கள். சுவாமிஜியின் விருப்பம் என்னவென்றால் தானும் தன்னுடன் வந்தவரும் ஆங்கிலம் தெரிந்தவர்கள் என்பதை ராஜ்நாராயணன் போஸ் அறியவிடக் கூடாது என்பதுதான். பல ஆண்டுகள் கழித்து சுவாமி விவேகானந்தர் புகழ் அடைந்த ஒருவரான பின் இந்தச் சந்திப்பை நினைவுப்படுத்திக் கொண்ட ராஜ்நாராயண் போஸ் ''அவருக்கு ஆங்கிலம் தெரியாது என்றல்லவா நினைத்தேன்'' என்று ஆச்சரியப்பட்டார்.

## வாராணசி:

வைத்யநாத் தாமிலிருந்து அவ்விரு இளம் துறவிகளும் வாராணசி கிளம்பிச் சென்றார்கள். சுவாமிஜியின் நண்பர் பிரமத தாஸ் மித்ரா அவர்களை அன்புடன் வரவேற்றார். சுவாமிஜியின் ஆன்மா இமயமலை செல்லத் துடித்துக் கொண்டிருந்தது. இரகசிய கூடபக்தியும் மௌனமும் செறிந்த அப்புனித கம்பீர மலையின் இதயத்தில் சமாதியில் மூழ்கிப் போய்விட வேண்டுமென்று அவர் தீவிரமாக விரும்பினார். கொஞ்சகாலம் கழித்து அவர் வாராணசியை விட்டுக் கிளம்பி விட்டார். கிளம்பும்போது ''நான் அடுத்த தடவை இங்கே வரும்போது ஒரு வெடிகுண்டினைப்போல சமுதாயத்தின்மீது வெடித்துச் சிதறுவேன்'' என்று பிரமததாஸ் மித்ராவிடம் கூறிச்சென்றார் சுவாமிஜி.

(தொடரும்)

# காட்சி மேடை - 14

## நைனிதால்

ஓரிரு இடங்களுக்குச் சென்றுவிட்டு சுவாமி விவேகானந்தரும், சுவாமி அகண்டானந்தரும் நைனிதால் வந்தடைந்தனர் பத்ரிகாசிரமம் செல்லவேண்டும் என்பது அவர்கள் நோக்கம். பத்ரிநாத்துக்கு கால்நடையாகவே செல்வதென்றும் தம்முடன் பணம் எதுவும் எடுத்துச் செல்வதில்லை என்றும் அவர்கள் முடிவு செய்திருந்தனர். பயணத்தின் மூன்றாவது நாள் இரவு ஒரு ஓடையின் கரையில் ஒரு தண்ணீர் வேகத்தில் மாவு அரைக்கும் இயந்திரத்தின் பக்கத்தில் தங்கினார்கள்; ஒரு அரசமரத்தடியில் அவர்கள் தியானத்துக்கு அமர்ந்தார்கள்.

பிற்பாடு சுவாமி விவேகானந்தர் சுவாமி அகண்டானந்தரிடம் சொன்னார். ''கங்காதர், இந்த மரத்தடியில் என் வாழ்க்கையின் மிகப்பெரிய பிரச்சினைகளில் ஒன்று தீர்ந்து போய் விட்டது''. ஆன்மாவின் ஆழ்ந்த அமைதியில் விவேகானந்தர் பெற்ற ஆன்மீக அனுபவத்தைத் தன் நோட்டுப் புத்தகத்தில் அவர் இவ்வாறு குறிப்பிட்டு வைத்துள்ளார்.

துவக்கத்தில் ''சப்தமே'' இருந்தது ............

''அண்டமும் பிண்டமும் ஒரே திட்டத்தின் அடிப்படையில் நிர்மாணிக்கப்பட்டுள்ளன. தனிப்பட்ட ஆத்மா வாழும் ஒரு உடலில் வைக்கப்பட்டிருப்பதைப் போல் அனைத்தையும் விரவிய ஆன்மாவும் வாழும் பிரகிருதியில் (இயற்கையில்) குடிகொண்டிருக்கின்றது. இவ்வியற்கையே நமக்கு முன்னே இருக்கும் உலகம். காளி சிவனை அணைந்திருக்கின்றார். இது கற்பனையல்ல. இந்த மாதிரி ஒன்றை ஒன்று சூழ்ந்திருப்பது, ஆன்மாவை இயற்கை சூழ்ந்திருப்பது, ஒரு கருத்துக்கும், அதை வெளிப்படுத்தும் சொல்லுக்கும் உள்ள உறவை ஒத்தது. அவை இரண்டும் ஒன்றே. மனத்தின் சூக்கும சிந்தனையால்தான் ஒருவர் அவ்விரண்டையும் வேறுபடுத்தி அறிய முடியும். சொற்களின்றி சிந்தனை செய்வது இயலாது. ஆகவேதான் துவக்கத்தில் சொல் (சப்தம்) இருந்தது என்பதெல்லாம். உலகளாவிய ஆன்மாவின் இந்த இரு வேறு இயற்கை என்றும் உள்ளது. நாம் காண்பதும்

உணர்வதும் என்றென்றும் உருவம் கொண்டதும் என்றென்றும் உருவம் அற்றதுமான இரண்டின் சேர்க்கைதான்.''

இவ்வாறு அவர் மனிதன் பிரபஞ்சம் (முழு இயற்கை) இவற்றின் ஒற்றுமையை உணர்ந்து கொண்டார். மனிதனே பிரபஞ்சத்தின் குற்றுருவம்தான். பிரபஞ்சத்தில் இருப்பதெல்லாம் உடலிலும் இருப்பதை அவர் உணர்ந்தார். முழுப் பிரபஞ்சமும் அணுவிலும் இருக்கின்றது. சுவாமிஜியின் குரு ஸ்ரீராமகிருஷ்ணர் ''சிவனும் சக்தியும் ஒன்று'' என்று அவருக்குக் கூறியுள்ளார். குருநாதர் கூறியதன் உண்மையையும், அதன் முக்கியத்துவத்தையும் மின்னலெனத் திடீரென உணர்ந்தார் விவேகானந்தர்.

சுவாமிஜியும் அவருடைய சகோதரச் சீடரும் மலைப்பாதைகளை நடந்து கடந்து அல்மோடா வந்தடைந்தனர். இங்கு இன்னும் இரு சகோதரச் சீடர்கள் அவர்களோடு சேர்ந்து கொண்டனர். துறவிகள் சேர்ந்து கடுவால் பயணப்பட்டனர்; கர்ணப்ரயாக் சென்றனர். அங்கிருந்து பத்ரிநாத் செல்லவேண்டும் என்பது அவர்கள் நோக்கம். ஆனால் பஞ்சம் காரணமாக அரசாங்கம் உத்தரவு ஒன்று போட்டு சாலையை மூடி விட்டதால் அவர்களால் மேற்கொண்டு செல்ல முடியவில்லை. அவர்கள் பல்வேறு புனிதத் தலங்களைச் சென்று பார்த்தார்கள்; பிச்சையெடுத்து உண்டார்கள்; சாஸ்திரங்களை ஓதினார்கள்; தியானம் செய்தார்கள். இந்த சமயத்தில் சுவாமிஜியின் இளைய சகோதரி தற்கொலை செய்து கொண்டார் எனும் அதிர்ச்சியூட்டும் செய்தி அவரை வந்தடைந்தது. பிற்காலத்தில் சகோதரி நிவேதிதை இதைக் குறிப்பிட்டு இவ்வாறு கூறினார்:- ''இந்த மரணம் சுவாமிஜியின் இதயத்தில் ஒருகாயத்தை உண்டாக்கியது. அந்தக் குத்துவலி ஒரு கணம் கூட நிற்கவில்லை. சுவாமிஜி பாரதப் பெண்களின்கல்வி, முன்னேற்றம் இவற்றில் அதிதீவிர விருப்பம் கொண்டிருந்ததற்கான பல காரணங்களில் இந்தத் துயரமும் ஒரு காரணமாக இருக்கலாம்.''

## காட்சி மேடை - 15

### ரிஷிகேசம்

பத்ரிநாத் செல்ல முடியாத ஏமாற்றத்திலும் சுவாமிஜி இமயமலையில் தன் ஆன்மீக சாதனையைத் தொடரவேண்டும் என்ற உறுதியிலிருந்து தளரவில்லை. அவர் ரிஷிகேசம் சென்றார். முழுமையான அமைதியும் தனிமையும் கொண்ட ஒரு இடத்தை அவர் தேடிக் கொண்டிருந்தார்.

சுவாமிகள் டெஹ்றி சென்றபோது, விவேகானந்தர் சில நாட்களுக்கு ரகுநாத் பட்டாச்சார்யாவுடன் தங்கி இருந்தார். இவர் டெஹ்றி ராஜ்ய திவானும், பேரறிஞர் ஹரப்ரஸாத் சாஸ்திரியின் சகோதரரும் ஆவார். திவான் சுவாமிஜி தியானம் செய்வதற்கென கங்கையும் விலங்கனாவும் கூடும் இடம் ஆன கணேஷ்பிரயாக் என்ற இடத்தைத் தேர்ந்தெடுத்தார். அக்குழு வில் இருந்த கங்காதர் கடுமையாக நோய்வாய்ப்பட்டுவிடவே அவரைச் சமவெளிக்குக் கொண்டு செல்ல வேண்டியதாயிற்று. மௌனத்தில் அமரவேண்டுமென்ற விவேகானந்தரின் திட்டத் துக்கு மறுபடியும் இடைஞ்சல் உண்டாயிற்று. நோயுற்ற சகோதரச் சீடரை அவர் சிகிச்சைக்காக டேராடூன் கொண்டு சென்றார்.

கங்காதரின் சிகிச்சைக்கு டேராடூனில் ஏற்பாடுகள் செய்து விட்டு சுவாமிஜி சில சகத்துறவிகளுடன் ரிஷிகேசம் திரும்பி வந்தார். ரிஷிகேசம் காட்சிக்கு இனியது; தனிமையான இடம். இந்துக்களின் புராணம் மற்றும் கதைகளில் புனிதப் பெயர் பெற்றது. நீலவானம், ஆழ்ந்த பள்ளத்தாக்குகள், மலை அருவி கள், நீர்வீழ்ச்சிகள், கோயில்கள் நிறைந்த உயர்ந்த ஆற்றங் கரைகள் அவ்வப்போது தென்படும் பனிகவிந்த உயர் சிகரங்கள், நதிகளில் புனித நீராடும் வெவ்வேறு சம்பிரதாயத்தைச் சேர்ந்த யாத்ரிகள் சாதுக்கள் இவையனைத்தும் சேர்ந்து தவம் புரிவ தற்கான மனத்தை மயக்கும் சூழ்நிலையை உண்டு பண்ணின.

இங்கு விவேகானந்தர் கடுமையான காய்ச்சல், பிரக்ஞை தவறுதல் இப்படி மோசமாக நோய்வாய்ப்பட்டார். நாளுக்கு நாள் அவர் நிலைமை மோசமாகி வந்தது. சகோதரத் துறவி கள் அவர் உயிருக்காகக் கவலைப்படத் துவங்கினர். பெருஞ் சங்கடம் உருவாகும் நிலை. திடீரென ஒரு மலைவாசி தோன்றி சில நாட்டு மருந்துகளை தேனில் குழைத்து சுவாமிஜிக்குக் கொடுத்தார். இது வியக்கத்தக்க வகையில் விவேகானந்தரின் உயிரைக் காப்பாற்றியது. அவருக்கு மெள்ள மெள்ள பிரக்ஞை திரும்பிற்று. அவர் கூறிய முதல் வார்த்தை "உற்சாகம் கொள் ளுங்கள் சகோதரர்களே, நான் சாகமாட்டேன்" என்பதாகும். அவர்கள் சங்கடமும் தீர்ந்தது.

அவர் உடம்பு கொஞ்சம் தேறியதும் அவரை ஹர்த்வா ருக்குக் கொண்டுவந்தார்கள். ஆனால், மலைகளோ முன்பெப் பொழுதும் போலவே அவரை அழைத்தவண்ணம் இருந்தன. நிர்விகல்ப சமாதி அடைய துடித்துக் கொண்டிருந்த சுவாமி

விவேகானந்தர் திவிர சாதனை செய்யவிடாமல் இவ்வாறு திரும்பத்திரும்ப இடைஞ்சல்கள் உண்டாகிக்கொண்டே இருந்தன. தெய்வத்தின் குறுக்கீட்டால் அவர் இமயமலையின் இருதயப் பகுதிக்குச் சென்று பரம்பொருளுடன் ஒன்ற முடியாமல் போய்விட்டது. இருந்தாலும் அவரும், அவருடைய சகோதரத் துறவிகளும் மலைகளில் அலையும்போது பெற்ற ஆன்மீக லாபங்கள் மகத்தானவை. சுவாமிஜி கூறியபடி, சகோதரி நிவேதிதை எடுத்தியம்பினார். துறவிகள் ஓரிரவில் ரிஷிகேசத்தில் செய்த சாதனையின் வருணனை இதுவாகும்.

ஓரிரவு சுவாமிஜி பெரும் பக்திக்களிப்பில் இருந்தார். எங்களுக்கு ரிஷிகேசம் பற்றிச் சொன்னார்; சன்னியாசி கட்டிய குடிசை; மாலையில் கொழுந்துவிட்டு எரியும் தீ! எல்லாத் துறவிகளும் தத்தம் சிறு சிறு பாய் (ஆசனங்)களில் சுற்றி உட்கார்ந்திருந்தனர். உபநிஷதங்கள் பற்றித் தாழ்ந்த குரலில் பேசிக் கொண்டனர். ஏனெனில் ஒருவர் துறவுபூணும் முன்பே சத்தியத்தை அறிந்திருக்க வேண்டும். துறவிக்கு புத்திபூர்வமாக அமைதி கிட்டிவிட்டது. செய்ய வேண்டியதெல்லாம் அனுபவ பூர்வமாக அதை உணர்வதுதான். ஆகவே, பேசவேண்டிய தேவைகளை எல்லாம் கடந்தாயிற்று. மலை இருட்டில் தீச்சுடரின் அருகே உபநிஷதங்கள் பற்றித்தான் அவர்கள் பேசலாம். அப்புறம், மெள்ள மெள்ள குரல்கள் ஓய்ந்து விடுகின்றன- ஆழ்ந்த மௌனம் - ஒவ்வொருவரும் தன் பாயில் குத்திட்டு நேராக உட்காருகிறார்கள்- ஒவ்வொருவராக அமைதியாக நழுவி தத்தம் குடிசைகட்குப் போய்விடுகின்றார்கள்''.

## காட்சி மேடை - 16

### மேரட்

சுவாமி விவேகானந்தருக்குக் கொஞ்சம் பலம் வந்ததும் அவரைச் சமவெளிகட்கு அழைத்துச் சென்றார்கள். மேரட் வந்து சேர்ந்தார்கள். அங்கு அவர்கள் டாக்டர் திரைலோக்கியநாத் கோஷ் வீட்டில் தங்கினார்கள். அங்குதான் ஏற்கெனவே அகண்டானந்தர் தங்கி இருந்தார். சுவாமிஜி அங்கே பல சகோதரத் துறவிகளைச் சந்தித்தார். அவர்கள் எல்லோரும் ஒன்றாக, சேட்ஜியின் தோட்டம் என்ற இடத்தில் தங்கப் போனார்கள், ஸ்ரீராமகிருஷ்ணரின் நேர்ச்சீடர்கள் உட்பட சகோதரத் துறவிகளுடன் அங்கே ஒரு மடாலய வாழ்க்கை துவங்கியது. விவேகானந்தரின் உடல்நிலை விரைவில் தேறத் தொடங்கிற்று. துறவிகள் சாத்திர நூல்களை ஓதினர்; பிரார்த்

தனைகள் செய்தனர்; பக்திப் பாடல்கள் பாடினர். இவ்வாறு மேரட்டில் ஒரு குட்டி வரநகர் மடத்தையே உண்டாக்கினர்.

சுவாமி விவேகானந்தர் அற்புதத் திறமை கொண்டவர்; தான் எடுத்துக் கொண்ட எந்த விஷயமானாலும் சரி அதைப் பற்றிய உணர்ச்சி வெள்ளமும், கருத்தோட்டமும் பெருக்கெடுத்து ஓடச்செய்து விடுவார். அவர் இருக்கும் இடத்தில் புத்துணர்வும், தெய்வீக உற்சாகமும் பெருகும். இந்த நாட்களைப் பற்றி சுவாமி அகண்டானந்தர் குறிப்பிடுகிறார்:- சுவாமிஜி எந்த விஷயத்தைப் பற்றிப் பேசினாலும், தம் கருத்துக்களை எந்த உணர்வோடு பேசினாலும் கேட்பவர்கள் மனத்தில் அந்தக் கணத்துக்கு அது ஒன்றுதான் முழுச்சத்தியம் என்ற எண்ணம் தோன்றும். பேலூரில் கங்கைக் கரையில் வெவ்வேறு நாட்களில் வெவ்வேறு கருத்துக்கள் தோன்றி மேலெழும். அந்தந்த நாட்களில் எடுத்துச் சொல்லப்பட்ட கருத்துக்களுக்கும் உணர்வுகட்கும் தகுந்தபடி மடமே உயிர்த்துடிப்புக் கொண்டு திகழும். சுவாமிஜி சிவனைப் பற்றி உரையாடினால் சுவாமிஜி தானே சிவ-சங்கரரின் அவதாரமாக ஆகிவிட்டது போலிருக்கும். மடம் முழுவதும் அத்தகைய உணர்வுகளால் நிறைந்து போய்விடும். அவர் புத்தரைப் பற்றி உரை நிகழ்த்தும் தருணத்தில் மடம் புத்த மடாலயமாக உருமாறி விடும். அங்கே சாந்தமும், அமைதியும் திகழும். இன்னொரு நாள் ராதாராணியின் பிரார்த்தனைப் பாடல்கள் பேசப்பட்டால் உணர்ச்சிப் பிரவாகம் கட்டுக்கரையின்றி ஓடும். சுவாமிஜி இடைப்பெண்ணின் 'பாவத்துக்கே' சென்று விடுவார். மடம் கோபினியின் உணர்ச்சி வெள்ளத்தில் முழுகிப்போய் விடும். பலதடவை சுவாமிஜி இவ்வரிகளைப் பாடுவார்:

''ரத்தமும் சதையும் அல்லள் ராதை
அன்புக்கடலில் எழும் அழகு நுரை அவள்தான்''

ஒரு சீடர் சுவாரசியமான ஒரு சம்பவத்தை எடுத்துரைத்தார். இது விவேகானந்தரின் பேரற்புதமான நினைவாற்றலையும், மனச்சக்தியையும் ஒளியூட்டி விளக்குகின்றது. ஒரு சமயம் சுவாமிஜி உள்ளூர் நூலகத்திலிருந்து ஜான்லுப்பாக்கின் நூல்களைப் படிப்பதற்காக எடுத்து வந்தார். புத்தகங்களை மறு நாளே திருப்பித்தரக் கொண்டுபோனபோது நூலகர் அந்தப் புத்தகங்களை சுவாமிஜி படிக்கவே இல்லையோ என்று சந்தேகப் பட்டார். இதைக்கேட்ட சுவாமிஜி. அந்த நூல்களிலிருந்து வினாக்கள் தொடுத்துத் தன்னைச் சோதித்துப் பார்க்கும்படி நூலகரிடம் கூறினார். நூலகரும் கேள்விக்கணைகளைத் தொடுத்

தார். நூலகர் ஆச்சரியத்தில் மூழ்கிப்போகும்படியாக விவேகானந்தர் பொருத்தமான விடைகளைக் கூறினார். சுவாமிஜி பழைய காலரிஷிகளைப்போல் நினைவோட்டம் (ஸ்மிருதிதாரா) உடையவர் ஆவார்.

ஒருசமயம் சுவாமிஜியை மரியாதை நிமித்தம் சந்திக்க ஒரு ஆப்கானிய கனவான் வந்தார். அவர் பெயர் அப்துர் ரஹ்மான். சாதுக்களை அணுகுவதில் அவரும் ஹிந்துக்களைப் போலவே நெறி பிசகாதவர். முன்னரே குளித்துவிட்டு ஒரு ஹிந்துப் பணியாள் கையில் இனிப்புக்கள் நிறைந்த கூடைகளைத் தாங்கிவர அவர் நுழைந்தார் இந்த சாதுவுக்கு யாருடைய கையிலிருந்து வேண்டுமானாலும் உணவு வாங்கி உண்ணும் தாராள சுபாவம் உண்டு என்று அப்துர் ரஹ்மான் அறியவில்லை.

மேரட்டில் துறவிகள் ஏறத்தாழ 5 மாதங்கள் தங்கி இருந்தனர். அவர்கள் மகிழ்ச்சியுடன் தம் குரு ராமகிருஷ்ணர் கூறியபடி தம் தலைவர் காட்டிய லட்சியங்களைப் பின்பற்றி வாழ்ந்து வந்தனர்.

ஆனால், சுவாமி விவேகானந்தர் தன் 'அலையும் துறவி' என்ற கட்டத்தை இன்னும் தாண்டியாகவில்லை. அவர் நீண்ட தொரு யாத்திரையை மேற்கொள்ளத் தன் மனத்தைப் பக்குவப் படுத்திக் கொண்டிருந்தார். இதை அவருடைய சகோதரத் துறவிகள் அறிந்தபோது அவர்கள் அவரைத் தடுக்க முயன்றனர்.

மறுபடியும் அவர் மனம் கொந்தளித்தது. அலையும் வாழ்க்கை வாழத் தாகம் கொண்டார் அவர். இந்தத் தடவை தனியே செல்லவேண்டும் என்ற விருப்பம் எழுந்தது. தன் எதிர்காலப் பணித் திட்டங்களைப் பற்றிய மின்னல்கள் அவர் மனவானில் அப்போதைக்கப்போது தோன்றிக் கொண்டிருந்தன. அவற்றைப் பற்றி ஆழ்ந்து சிந்திக்க அவர் விரும்பினார். அவருடைய இமாலய யாத்திரைகளிலிருந்து ஒரு விஷயம் அவருக்கு உறுதியாயிற்று. தன்னைத்தானே ஒரு குகையில் அடைத்துக்கொள்ள தெய்வ சக்தி அவரை அனுமதிக்காது. அவ்வாறு அவர் செய்ய நினைத்த ஒவ்வொரு சமயத்திலும் ஒரு மகத்தான சக்தி அவரை உந்தி வெளித்தள்ளியதுபோலிருந்தது. பாரத நாட்டின் பாமர மக்களின் ஆன்மீகப் பிணியும் புதிய பணி ஆற்றும் மார்க்கத்தில் அவரைக் கைதட்டி அழைத்தன. அப்பணிகளின் வெளி உருவமோ அவருக்குத் தெளிவாகத் தெரியவே இல்லை,

ஜனவரி 1891 ஒருநாள் காலை சுவாமிஜியைக் காணோம். தனியே யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் அவர் புறப்பட்டுச் சென்று விட்டார். தான் எங்கே போகிறோம் என்று தன் அன்புக்குரிய சகோதரத் துறவிகள் அறிவதைக்கூட அவர் விரும்பவில்லை. அவர்கள் தத்தம் தனிச் சிறப்புள்ள ஆன்மீகப் பாதைகளில் சுதந்திரமாகவும், தற்சார்புடனும் பயணம் செய்ய வேண்டுமென்று சுவாமிஜி விரும்பினார்.

## காட்சி மேடை - 17

### தில்லி

சுவாமிஜி சுவாமி விவிதிசானந்தர் என்ற நாமம் பூண்டு கொண்டார். யாரும் தன்னை அடையாளம் கண்டு கொள்ளாமல் தான் பயணம் செய்ய வேட்கை கொண்டார் அவர். தன் பாதச் சுவடுகளைப் பாரதநாட்டுப் புனித மண்மூடி மறைத்து விடவேண்டும்; யாருமறியாத் துறவியாகத் தான் இருக்க வேண்டும்; ஆயிரக்கணக்கான துறவிகளில் ஒருவராகத் தான் இருக்க வேண்டும். நாட்டின் நடுவழியிலும், சந்தையிலும், மருபூமியிலும், வனங்களிலும், மலைக்குகைகளிலும் திரியும் ஆயிரத்தில் அறிமுகம் இல்லாத ஒருவராகத்தான் இருக்க வேண்டும்; ஆனால், அவர் வெளிப்பார்வைக்கு ஒரு துறவிபோல் தோற்றம் அளித்தாலும் கண்களில் சுடர் விட்டெரிந்த ஆன்மசக்தியும், கம்பீரத் தோற்றமும் அவரை மனிதருள் ஒரு மாமன்னராகப் பிரித்துக் காட்டின.

தில்லியில் சுவாமிஜி அரண்மனைகளையும், மசூதிகளையும், கல்லறைகளையும் சென்று கண்டார். நவீன நகரத்தில் நானாபக்கங்களிலும் உருக்குலைந்துபோன பேரரசுகளின் அழிவுச் சின்னங்கள்தான் அவருக்குத் தென்பட்டன. சரித்திரகாலத்துக்கு முற்பட்ட மகாபாரதக் காலம் முதல் பல பேரரசுகளின் எச்சங்கள், உலகாயதச் சாதனைகள் தோன்றி மறைபவையே என்று அவருக்குச் சொல்லின. ஆனால், அவற்றினூடே பழமையான ஆன்மா மரணமே இன்றி ஜீவித்திருப்பதை ஆனந்தமும், உயிர்த் துடிப்பும் கொண்ட (புதிய) தில்லி அவருக்கு உணர்த்திற்று.

மேரட்டிலிருந்து சில சகோதரத்துறவிகள் டில்லி வந்த போது தற்செயலாகத் தம் அன்புத் தலைவரைச் சந்தித்தனர். சுவாமிஜிக்குக் கோபம்தான் வந்தது. அவர் சொன்னார்: ''சகோதரர்களே! என்னைத் தனியே விட்டுவிடுங்கள் என்று

நான் உங்களிடம் விருப்பம் தெரிவித்தேன். என்னைத் தொடர்ந்து வராதீர்கள் என்றேன். இன்னொரு தடவை சொல்கிறேன். என் பின்னால் வராதீர்கள். நான் உடனே தில்லியை விட்டுப் புறப்படப் போகிறேன். நான் இருக்குமிடத்தை அறிய ஒருவரும் முயற்சி செய்யக்கூடாது. பழைய தொடர்புகள் அனைத்தையும் துண்டித்துக் கொள்வேன். என் ஆன்மா எங்கே என்னை அழைத்துச் செல்கிறதோ அங்கெல்லாம் நான் அலைந்து திரிவேன். நான் வனத்தில் அலைந்தால் என்ன, பாலைவனத்தில் திரிந்தால் என்ன, மலையில் தனிவழி நடந்தால் என்ன, மக்களிடையே பெருநகரில் போனால் என்ன? நான் செல்கிறேன். தத்தம் சொந்த அறிவுக்கேற்ப ஒவ்வொருவரும் தம் லட்சியத்தை அடைய முயற்சி செய்யட்டும்''.



# காட்சி மேடை - 18

**ராஜபுதனம்**

சுவாமிஜி தனியே செல்ல விரும்பினார். சரித்திரப் புகழ் வாய்ந்த ராஜபுதனத்தைத் தேர்ந்தெடுத்து அவ்வழியில் போனார். தம்ம பதத்தின் புனிதச் சொற்களை ஓதியபடியே அவர் நடந்தார்.

''வழியே இன்றி நடந்து முன்னேறிச்செல்
எதற்கும் பயம் இன்றி எதைக் கண்டும் தயங்காது
காண்டாமிருகம்போல் கடு வழியே தனிநடந்து
சலசலப்பைக் கண்டு நடுங்காத சிங்கம்போல்
சல்லடையில் சிக்காத சண்டமாருதம்போல்
தண்ணீரும் கறைபடுத்தா தாமரையின் தனியிலைபோல்
காண்டாமிருகம் போல் கடுவழியில் தனி நடப்பாய் ''

கோட்டைகள் நிறைந்தது, மகத்தான மாநகரங்கள் பெருத்தது. ராஜாக்களும் ராணாக்களும் நிறுவிய ராஜபுதனம் அவர் கண்முன்னே பாரத வரலாற்றின் ஏற்றங்களும், இறக்கங்களும் மிகுந்த வரலாற்றின் ஏடுகள் புரண்டன, வீர வரலாறுகளும், தியாக வரலாறுகளும், சாகச சம்பவங்களும் விரிந்தன, பழமையின் உணர்வுகள் நிகழ்காலத்துடன் ஒன்றறக் கலந்தன.

சுவாமி விவேகானந்தர் அமைதியாக இந்தக் காட்சி அரங்கத்துக்குள் நுழைந்தார். யாருமறியாத் துறவியாக. சில சமயம் அவர் அரண்மனைகளில் தங்கினார்; சில சமயம் கோயில் கூரையின் கீழ் வாசம், வறியவர்களுடனும், கற்றறியாதவர்களுடனும் உறைந்தார். சில சமயம் மலைக்குகைகளில் பொழுதைப் போக்கினார். மன்னர்களைச் சந்தித்து உறவாடினார் - சிலரைக் கண்டித்தார். சிலருக்கு நம்பிக்கையூட்டினார் சமுதாயத்தின் அனைத்துப் பிரிவினரையும் சந்தித்தார் அவர்களைப் பற்றி அறிந்து கொண்டார். அவர்களோடு பல விஷயங்கள் குறித்து உரையாடினார். ஆன்மீகச் சொற்பெருக்குகளின் மூலம் கேட்போரைத் திக்குமுக்காடச் செய்தார். பாடல்கள், மாமனிதர்கள், மகளிர் பற்றிய கதைகள் மூலம் கேட்போ

ருக்குப் பேரானந்தமூட்டினார். ஹிந்துக்கள், முஸ்லீம்கள் ஆகி யோரின் விருந்துபசாரத்தை ஏற்றுக்கொண்டு அவர்கள் வீட்டில் தங்கினார்,

ராஜபுதனத்தில் அவர் தங்கியிருந்த நாட்களில் பல முக்கிய சம்பவங்கள் நடந்தன. பல ஆண் பெண்களின் வாழ்க்கையில் மகத்தான மாற்றங்களை அவர் உண்டுபண்ணினார். பிற்காலத் தில் அவருடைய லட்சியப் பணிகட்கு உதவிய பலரின் நட்பு அவருக்கு முதலில் ஏற்பட்டது இந்தக் காலக்கட்டத்தில்தான்.

## காட்சி மேடை - 19

### ஆள்வார்

1891 பிப்ரவரியில் சுவாமிஜி ராஜபுதனத்தில் ஒரு குறு சமஸ்தானமாக விளங்கிய ஆள்வாருக்குப் போனார். மலைமேல் கோட்டை; மலையடிவாரத்தில் ஆள்வார்நகர். குருசரன் லஸ்கர் என்ற வங்காளி கனவானை சுவாமிஜி சந்தித்தார். தங்குமிடமும் தேட லஸ்கர் உதவினார். சுவாமிஜியின் கண்ணியத் தோற்றம் லஸ்கரை பெரிதும் கவர, அவர் தன் முஸ்லீம் நண்பரை அழைத் தார். அந்த மௌல்வியும் வங்காள 'தர்வேசை'ச் சந்தித்தார். ''இத்தகைய மகாத்மாவை நான் கண்டதே இல்லையே'' என்றார் லஸ்கார். மௌல்வி ஒரு பாரசீக, உருது ஆசிரியர் ஆவார். சுவாமிஜி அவரைக் கவர்ந்தார். ஒரு தெய்வீக புருஷரைச் சந்திப்பதாக உறுதியாக உணர்ந்தார் மௌல்வி. சுவாமிஜி குரான் பற்றி உரையாற்றினார். ''குரானில் மிகச் சிறப்பாகக் குறிப்பிடப் படவேண்டிய அம்சம்-அது 11 நூற்றாண்டுகட்கு முன் எப்படி இருந்ததோ அவ்வாறே இன்றும் துவக்ககாலத் தூய்மை குன்றாமல் இடைச்செருகல்கள் சேராமல் இருப்ப தாகும்'' என்றார்.

சுவாமிஜி ஆள்வாரில் தங்கிஇருந்தபோது பலர் அவரைத் தரிசிக்க வந்து கொண்டே இருந்தனர். அவர்களில் ஹிந்துக் களும், முஸ்லீம்களும் அடங்குவர். இந்த சாது செயல்திறம் மிகுந்தவராக விளங்கியது அவருடைய சமய அறிவு, பொது அறிவு, அவருடைய இசைத்திறமை இவை இளையவர்களையும், முதியவர்களையும் ஒருங்கே அவரிடம் கவர்ந்திழுத்தன. சில நேரங்களில் சுவாமிஜி பராசக்தியின் திருநாமத்தை உச்சரிக்கை யில் பேரானந்தப் பரவசத்தில் ஆழ்ந்து விடுவார். இந்த உணர்வு கள் வந்திருப்போரையும் சூழ்ந்துகொள்ள அவர்கள் பெரிதும்

மனம் கிறங்கிப் போவர். இத்தகைய கூட்டங்கள் நடுநிசி வரை நீடிப்பதும் உண்டு சில நாட்களில். இந்த ஹிந்து தர்வேசைக் கண்டு உள்ளூர் முஸ்லீம் பக்தர்கள் கவரப்பட்டனர்.

ஒரு தடவை மௌல்வி சுவாமிஜியைத் தன் வீட்டுக்கு அழைத்து பிட்சை அளித்தார். அதை சுவாமிஜியும் ஏற்றுக் கொண்டார். சுவாமிஜிக்கு விருந்துபசாரம் பண்ணும் பேறு இன்னும் பல முஸ்லீம் கனவான்கட்கும் கிட்டிற்று.

இந்தச் சமயத்தில் தான் அந்த சமஸ்தானத்து மன்னர் மங்கள் சிங் சுவாமிஜியுடன் மோதியது இந்தச் சந்திப்பு சூடான விவாதமாக மாறிற்று. மங்கள் சிங்கின் கருத்துக்களும், அவர் நடந்து கொள்ளும் முறையும் முழுக்க முழுக்க ஆங்கிலேயர்களைப் பின்பற்றுவதாக அமைந்தது. மகாராஜா உரையாடலை ஒரு கேள்வியுடன் துவக்கினார். ''உடல் ஆரோக்கியமும் அறிவுத் திறனும் கொண்ட சுவாமிஜி இந்த மாதிரி அலைந்து திரியும வாழ்க்கையை மேற்கொள்வானேன்?'' சுவாமிஜி பதிலடி கொடுத்தார். ''நீங்கள் முதலில் சொல்லுங்கள். மேற்கத்தியர்களோடு சேர்ந்து தங்கள் அரசின் கடமைகளை விட்டு விட்டு வேட்டையாடுவதில் நேரத்தை நீங்கள் செலவழிப்பானேன்?'', மகாராஜா கூறினார்: ''ஏனென்று காரணம் கூற என்னால் இயலாது. ஆனால் அது எனக்குப் பிடித்திருக்கிறது என்பதில் சந்தேகம் இல்லை''.

''சரிதான் அதே காரணத்தினால்தான் நான் துறவியாக அலைகிறேன்'' என்றார் சுவாமிஜி.

அடுத்து மஹாராஜா உருவ வழிபாடு பற்றித் தன் மறுப்பை வெளிப்படுத்தினார். உருவங்கள் வெறும் கல், மண், உலோக வடிவங்கள்தானே! சுவாமிஜி ஹிந்துக்கள் கடவுளை மட்டுமே வணங்குகின்றார்கள், உருவங்கள் வெறும் அடையாளச் சின்னங்களே என்று விளக்கப் பெரும்பாடுபட்டார். அது வீண் முயற்சியானது. மகாராஜா சமாதானம் அடையவில்லை. அதைக்கண்ட சுவாமிஜி சுவற்றில் தொங்கிக் கொண்டிருந்த மஹாராஜாவின் உருவப் படத்தைக் கீழே இறக்கி அதன்மீது காறி உமிழும்படி பிரதம மந்திரியிடம் கூறினார். இந்தக் கொந்தளிப்பூட்டும் யோசனையைக் கேட்டு அங்கிருந்த அனைவரும் நடுக்கமுற்றனர். மகாராஜாவின் பக்கம் திரும்பி சுவாமிஜி கூறினார். அந்தப்படம் வேறு, ரத்தமும் சதையும் உள்ள மகாராஜா வேறு. இருப்பினும், அந்தப்படம் ஒவ்வொரு

வருடைய மனத்திலும் மகாராஜாவையே நினைவூட்டியதால் மரியாதைக்கு உகந்ததாயிற்று. அதுபோலவே இறைவனின் உருவமும் பக்தரின் மனத்தில் தெய்வம் இருக்கிறது என்பதையும் நினைவூட்டி மனத்தைக் குவிய வைக்க உதவுவதாகும். இது ஒருவரின் ஆன்மீக வாழ்க்கையின் ஆரம்ப காலத்தில் முக்கியமானதாகும். தன் முரட்டுத்தனத்துக்காக, மகாராஜா சுவாமிஜியிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.

விவேகானந்தர் ஆள்வாரில் ஏழு வாரங்கள் தங்கி இருந்தார். பலருடைய வாழ்க்கையில் அவரால் மாற்றங்கள் உண்டாயின

ஆள்வாரிலேயே இன்னும் கொஞ்ச காலம் தங்கி இருக்கும்படி ஆள்வார் மகாராஜா மங்கள்சிங் தன் திவான் மூலம் சுவாமிஜியைக் கேட்டுக் கொண்டார். சுவாமிஜி இந்த வேண்டுகோளுக்கு இணங்கினார், ஒரு நிபந்தனையுடன், ஏழை, எழுத்தறிவில்லாத மக்கள் அடிக்கடி மகாராஜாவை வந்து பார்க்க முயலும்போது பணக்காரர்களும், உயர் பதவியில் இருப்பவர்களும் சலுகை பெறுவது போலவே, இந்த எளியவர்களும் சுதந்திரமாக மன்னரைப் பார்க்க அனுமதி பெறவேண்டும் என்பதே அந்த நிபந்தனை.

சுவாமிஜியின் ஆணைகட்கு இணங்க ஆள்வார் நாட்டு இளைஞர்கள் பலர் சமஸ்கிருதம் படிக்க ஆரம்பித்தனர். சுவாமிஜியே ஆசிரியர் ஆனார். மேற்கத்திய விஞ்ஞானம் பயிலுவதற்கும் அவர் முக்கியத்துவம் கொடுத்தார். நம்முடைய பழைய வரலாறு பற்றி ஆராய்ச்சி செய்யும்போது எத்திசையில் போகவேண்டும் என்று ஐரோப்பியர்கள் காட்டியுள்ளனர் என்றார் ஆனால் பாரதம் பற்றிய வரலாற்றை தனக்கென்று ஒரு சுதந்திர ஆராய்ச்சிப் பாதையை வகுத்துக் கொண்டு நம் நாட்டவரே எழுதவேண்டும் என்றார் சுவாமிஜி.

## காட்சி மேடை - 20

### ஜெய்ப்பூர்

சுவாமி விவேகானந்தரை அறிந்தவர்கள் அவர் வரலாறு பற்றிய ஆழமான உணர்வு பெற்றிருந்தார் என்று கூறுகின்றார்கள். பாரதத்தின் மகத்தான கடந்த காலம் பற்றி அவர் உள்ளார உணர்ந்திருந்தார். அதை அவர் ஒவ்வொரு முக்கிய இடத்திலும் அடையாளம் கண்டு கொண்டார். தம் தாய் நாட்டின் பரந்த விரிந்த பாரம்பரியத்தின் ஊடே புனித யாத்

திரை செய்பவராக அவர் விளங்கினார். ஒரு பக்தர் சுவாமிஜியை ஆள்வாரில் சந்தித்து ஜெய்ப்பூருக்கு வருகை தரும்படி வற்புறுத்திக் கேட்டுக் கொண்டார். இந்தத் தடவை அவர் புறப்பட்டபோது அவர் ஜெய்ப்பூர் நகரம் நோக்கிச் சென்றார். பெரும் எண்ணிக்கையில் அவருடைய ஆள்வார் நாட்டுச் சீடர்கள் வெகுதூரம் அவரைத் தொடர்ந்து வந்தார்கள். பிறகு அவர்களைச் சமாதானப்படுத்தித் திருப்பி அனுப்ப வேண்டியதாயிற்று. அவர் நடந்து செல்வதினால் உண்டாகும் துன்பத்தைக் காணச் சகியாத சீடர்கள் ஒரு மாட்டு வண்டிக்கு ஏற்பாடு செய்தார்கள். வழியில் பல கிராமங்களைக் கடந்தும், இரவில் கோயில்களில் தூங்கியும் அவர் பயணம் செய்தார்.

சுவாமிஜி ஆள்வாரிலிருந்து ஜெய்ப்பூர் பயணம் செய்யும் போது பண்டுபோலில் ஹனுமான் கோவில், டாஹ்லாவில் நீலகண்ட மகாதேவர் ஆலயம், நாராயணி எனும் ஊரில் நாராயணி ஆலயம் ஆகியவற்றில் தரிசனம் செய்தார்.

ஆள்வாரில் சுவாமிஜி மக்களை சம்ஸ்கிருத அறிவினையும், மேலைநாட்டு விஞ்ஞான அறிவினையும் ஒரே சமயத்தில் ஆழமாகப் பெற வேண்டும் என்றார். ஜெய்ப்பூரிலோ அவரே ஒரு சம்ஸ்கிருத மாணவராகிவிட்டார்.

சுவாமிஜி ஜெய்ப்பூரில் தங்கியிருந்த சமயத்தில் குறிப்பிடத் தக்கதொரு சம்பவம் நிகழ்ந்தது. நாட்டின் தளபதி சர்தார் ஹரிசிங்குடன் சுவாமிஜி நட்பு பூண்டார். சர்தார் வேதாந்தத்தில் ஆழ்ந்த நம்பிக்கை உடையவர் உருவ வழிபாட்டில் நம்பிக்கையும் உகந்ததுதான் என்று அவரை ஏற்க வைக்க சுவாமிஜியினால் முடியவில்லை. ஒருநாள் மாலையில் இவ்விரு நண்பர்களும் உலாவிக் கொண்டிருக்கையில் கிருஷ்ண பகவானின் திரு உருவம் ஒன்று ஊர்வலமாகச் செல்லக் கண்டனர். திடீரென சுவாமிஜி ஹரிசிங்கைத் தட்டி, ''அதோ பாருங்கள் ஜீவனுள்ள பரம்பொருளை'' என்று காட்டினார். அந்த உருவச்சிலையில் தளபதி கிருஷ்ணபகவானையே தரிசனம் செய்தார். கண்களில் ஆனந்தக் கண்ணீர் பொங்க சாலையிலேயே ஸ்தம்பித்து நின்று விட்டார்.

## அஜ்மேர்

ஜெய்ப்பூரிலிருந்து சுவாமிஜி அஜ்மேர் சென்றார். இங்கு தான் முஸ்லீம் மகான் முயினுத்தீர் சிஸ்தி தன் நீங்காத்துயில்

கொள்கின்றார். க்வாஜா ஸாகிபின் தர்கா (நினைவாலயம்) எல்லாச் சமயத்தினருக்கும் புனிதத்தலமாக விளங்குகின்றது. அஜ்மேரில் சுவாமிஜி ஹிந்து மற்றும் முஸ்லீம் ஆட்சிகளின் மகத்துவத்தை நினைவு கூர்ந்தார். புஷ்கர் எனப்படும் ஆதிதீர்த்தம் அஜ்மேரிலிருந்து ஏழு மைல் தொலைவில் உள்ளது. அங்கிருக்கும் அழகான ஏரியில் பகவான் பிரம்மா வேள்வி ஒன்று செய்ததாகப் புராணங்கள் கூறும்.

## ஆபுமலை

மே 1891 முதல் வாரத்தில் சுவாமி விவேகானந்தர் ஆபு மலை வந்தடைந்தார். இங்குள்ள நக்கி ஏரிக்கு அருகில் ரிஷி வசிஷ்டர் ஆசிரமம் அமைந்திருந்ததாக நம்பிக்கை. இங்கு தவம் புரிவோருக்காக பல குகை - அறைகள் அமைந்துள்ளன. ஆபு மலையில் தங்கியபோது சுவாமிஜி இவற்றில் ஒன்றில்தான் வசித்தாராம். தில்வாடாஜெயின் கோவிலுக்குச் சென்று அக்கோயிலின் கட்டிடக் கலையை வியந்தார் சுவாமிஜி. அதைக் கட்டும் பணியை ராட்சசர்கள் துவங்கி பொற்கொல்லர்கள் நிறைவேற்றி வைத்தார்கள் என்று சொல்வதுண்டு.

தன் குகையில் அதிக நேரத்தை சுவாமிஜி தியானத்தில் செலவழித்தார். ஒருநாள் எதேச்சையாக ஒரு சம்பவம் நிகழ்ந்தது. உள்ளூர் சமஸ்தானம் ஒன்றில் வழக்குரைஞராகப் பணி புரிந்து வந்த ஒரு முஸ்லீம் கனவான் சுவாமிஜியை குகையில் சந்தித்தார். சுவாமிஜியின் சொற்களைக் கேட்டு அவர் பெரிதும் கவரப்பட்டார். நான் தன் மாளிகையில் தனியே இருப்பதால் தன்னுடன் வந்து தங்கும்படி அவர் சுவாமி விவேகானந்தரை வேண்டினார். சுவாமிஜி ஒப்புக்கொண்டார். ஆனால், அவருடைய ஹிந்து நண்பர்களோ ஒரு ''மிலேச்சரின்'' விருந்தோம்பலை ஏற்றுக் கொண்டதற்காக சுவாமிஜியிடத்தில் வியப்பும் வருத்தமும் கொண்டனர்.

ஆபுமலையில் தான் சுவாமி கேத்ரி மகாராஜாவைச் சந்தித்தது. பின்னாளில் கேத்ரி மன்னர் அவருடைய பக்தரும் நெருங்கிய சீடரும் ஆனார். சுவாமிஜியின் வழியில் மஹாராஜா வந்தது இறைவனின் திருவுள்ளமே! மஹாராஜா தன் பரிவாரங்களுடனும் தன் தனிச் செயலர் முன்ஷி ஜக்மோஹன்லாலுடனும் கோடையை ஆபுமலையில் கழிப்பதற்காக வந்தார். முஸ்லீம் வழக்குரைஞர் ஜக்மோஹன்லாலைத் தன் இல்லத்துக்கு அழைக்க அங்கே சுவாமிஜியும், லாலும் சந்தித்

தனர். முன்ஷி சுவாமிஜியை எடுத்த எடுப்பிலேயே கேட்டார்: ''ஒரு ஹிந்துத் துறவியான தாங்கள் ஒரு முஸ்லீமுடன் தங்கியிருப்பது எப்படி?'' சுவாமிஜி கொதித்தெழுந்தார். பரமஹம்ஸர் என்ற சம்பிரதாயத்தைச் சேர்ந்த ஒரு துறவியான தான் சாதிகள் பற்றிய விதிகள் அனைத்தையும் கடந்தவர் என்றார். ஹிந்து சமுதாயத்தின் தலைவர்கள் குறுகிய மனப்பாங்குடன் தன் செயலைத் தூற்றினாலும் முஸ்லீம்களோடு சேர்ந்து உணவுண்பது சாத்திரபோதனைகட்கு விரோதம் ஆகாது என்றார் சுவாமிஜி. ''நான் எங்கணும் பிரம்மத்தைக் காண்கின்றேன். மிக அற்ப உயிரிலும் பிரம்மமே வெளித் தோன்றுகிறது. எனக்கு எதுவுமே தாழ்ந்ததில்லை, உயர்ந்ததில்லை சிவ! சிவ!!''

## சுவாமிஜி எழுதிய ஒரு கடிதம்

ஆபுமலை,
30, ஏப்ரல் 1891

அன்புள்ள கோவிந்த ஸஹாய்,

அந்த பிராம்மணச் சிறுவனுக்கு உபநயனம் செய்துவிட்டீர்களா? தாங்கள் சம்ஸ்கிருதம் கற்று வருகின்றீர்களா? எவ்வளவு தூரம் முன்னேறி இருக்கின்றீர்கள்? முதல் பகுதியை முடித்திருப்பீர்கள் என்று நம்புகின்றேன். சிவபூஜையை சிரத்தையுடன் செய்து வருகின்றீர்களா? இல்லாவிடில் முயன்று செய்து வாருங்கள். ''முதலில் பகவானின் சாம்ராஜ்யத்தைத் தேடு. எல்லா நன்மைகளும் உன்னை வந்து சேரும்!'' கடவுளைப் பின்பற்றுங்கள். உங்களுக்கு விருப்பமானதெல்லாம் வந்து சேரும். இரண்டு சேனைத் தலைவர்கட்கும் என் மரியாதையைத் தெரிவியுங்கள். அவர்கள் மிக உயர்ந்த பதவியில் இருந்தும் என்போன்ற ஏழைப்பக்கிரியிடத்தில் மிகுந்த அன்பு காட்டினார்கள். குழந்தைகளே! சமயத்தின் சாரம் கொள்கைகளில் இல்லை நடைமுறையில் (அனுஷ்டானத்தில்)தான் உள்ளது. நல்லவராக இருப்பதும் நன்மை செய்வதும் தான் சமயம் என்பதே. இதில் சமயம் முழுவதும் அடங்கிவிடுகின்றது. ''கடவுளே கடவுளே என்பவரல்ல, பிதாவின் விருப்பத்தை நிறைவேற்றி வைப்பவரே'' (உயர்ந்தவர்): ஆள்வாரைச் சேர்ந்த உங்கள் இளைஞர் அணி நல்லவர்கள் அணி. வெகுவிரைவில் நீங்கள் சமூகத்திற்கே அணிகலன்களாகவும், பிறந்த நாட்டுக்கு வரப்பிரசாதமாகவும் ஆகிவிடுவீர்கள்.

ஆசிகளுடன் உங்கள்
-வி-

பி.கு.: உலகம் அவ்வப்போது உங்களை ஒரு இடிஇடித்தாலும் மனம் தளராதீர்கள். விரைவிலேயே அக்கணம் மாறி எல்லாம் சரியாகி விடும்.

## காட்சி மேடை - 21

### கேத்ரி

கேத்ரி மன்னர் அஜித்சிங் சுவாமிஜியை முதல் தடவை சந்தித்த உடனேயே தன் நாட்டுக்கு வரும்படி அவரை அழைத்தார். சில நாட்களில் சுவாமி விவேகானந்தரும் கேத்ரி வந்தடைந்தார். அவர் மன்னருக்கு மந்திர தீட்சை அளித்தார். இவர்களுக்கு இடையில் அன்பும் மிகுந்த பயனும் கொண்ட குரு சீடர் உறவு உருவாயிற்று. மன்னர் மிகுந்த மரியாதை தெரிந்தவர். எதையும் தூண்டித் துருவிக் கேட்டுத் தெரிந்து கொள்ளும் சுபாவம் உடையவர். ஆன்மீக விஷயங்கள் பற்றி அவர் கேட்ட கேள்விகளில் அறிவும் மனப்பூர்வமான விழைவும் தெரிந்தன. மக்களின் நல்வாழ்வு குறித்து சுவாமிஜி கூறிய கருத்துக்களில் மன்னர் உற்சாகமும் காட்டினார். அவரிடத்தில் சுவாமிஜிக்கு விசேஷமான அன்பும் மரியாதையும் உண்டாயின. விஞ்ஞானக் கல்வியில் செயலூக்கம் காட்டும்படி சுவாமிஜி மன்னரை வற்புறுத்தினார். நாட்டுக்கு விஞ்ஞானப் பயிற்சியும், ஆராய்ச்சியும் தேவை என்று சுவாமிஜி கருதினார். இதனை கருதி, விஞ்ஞான ஆரம்பப் பாடநூல்கள் சிலவற்றை மன்னருக்காக வரவழைத்துக் கொடுத்தார். பிறகு சுவாமிஜி சில எளிமையான விஞ்ஞானக் கருவிகளைக் கொண்டு தன் அரச சீடருக்குப் பாடமும் சொல்லிக் கொடுத்தார்.

சுவாமி விவேகானந்தர் கேத்ரியில் பல வாரங்கள் தங்கியிருந்தார். தன் நேரம் முழுவதையும் அரண்மனையிலேயே கழிக்காமல் அடிக்கடி தன் ஏழைச் சீடர்கள் வீடுகட்குச் சென்றும் வந்தார். சுவாமிஜி கேத்ரி நகரம் முழுவதையுமே கவர்ந்தார்; ஏழைகளையும் கற்றறிந்த பண்டிதர்களையும் சந்தித்தார். புகழ் வாய்ந்த சம்ஸ்கிருத இலக்கண ஆசிரியர் பண்டித நாராயண தாஸரின் சீடராகவும் ஆகி தன் இதயவேட்கையைத் தணித்துக் கொண்டார். ஒரு சமயம் மன்னருடன் கூட குதிரைச்சவாரி செய்து கொண்டிருக்கும்போது, மன்னரின் மேல்கையில் ரத்தம் அதிகமாக ஒழுகிக் கொண்டிருப்பதை சுவாமிஜி கண்டார். சுவாமிஜி செல்வதற்காக வழியில் நீட்டிக் கொண்டிருந்த முட்கிளை ஒன்றை மன்னர் விலக்கிப் பிடித்துக் கொண்டிருந்தபோது அது

குத்தி மன்னர் கையில் ரத்தம் வெளிவந்தது தன் வருத்தத்தை சுவாமிஜி வெளிப்படுத்தியபோது மன்னர் நகைத்து ''சுவாமிஜி நாங்கள் எப்போதும் சமயத்தைக் காக்க வந்தவர்கள் அல்லவா?'' என்றார். அஜித்சிங்குக்கு விவேகானந்தர் நம்பிக்கையின் உருவகமாகத் தென்பட்டார்.

சுவாமிஜியோ இந்த க்ஷத்திரிய மன்னர் பாரதத்துக்கு ஆன்மீகப் புத்துணர்வூட்டும் பணியில் தம் பங்கை ஆற்றும் தகுதி படைத்தவர் என்று நம்பினார்.

சிக்காகோவில் சர்வமத மகாசபையில் சுவாமிஜி பெற்ற மகத்தான வெற்றியைப் பாராட்டி ஆரம்பத்திலேயே செய்தி அனுப்பியவர் இம்மன்னர்தான்.இதற்காகவே தன் அரசவையைக் கூட்டி இந்தப் பாராட்டுரையை அதிகாரபூர்வமானதாக செய்தார். தம் மறுமொழியில் சுவாமிஜி கூறினார்: ''உங்களைப் பற்றி எண்ணும்போது உங்கள் வமிசத்தின் விஞ்ஞான மனப்போக்கும், மகான்களுக்குரிய தூய ஒழுக்கமும் உங்களிடம் கலந்திருக்கக் காண்கிறேன். மனிதகுலத்தின்மீது அளவற்ற அன்பும் உங்களிடம் சேர்ந்திருக்கிறது. சநாதன தர்மம் புகழும் புத்துணர்வும் பெற்றுவிட, இத்தகைய கரங்கள் அதைப் புனர் நிர்மாணம் செய்வது, எனக்கு நம்பிக்கையூட்டுவதாக இருக்கிறது.''

சுவாமிஜி கேத்ரி விட்டுப் புறப்படுமுன் தன் குருவின் ஆசியை வேண்டிய மன்னர் தமக்கு ஒரு ஆண்குழந்தை வேண்டும் என்றார். தனக்குக் குழந்தை இல்லை என்பதில் மன்னருக்கு மிகுந்த வருத்தம். சுவாமிஜி ''உங்கள் ஆசை நிறைவேற வேண்டுமென்று நான் இறைவனிடம் பிரார்த்திக்கிறேன்'' என்றார். உண்மையில் அந்த ஆசை நிறைவேறிற்று என்பதை நாம் அறிவோம்.

## கடிதம் -5

ஹரிதாஸ் விஹாரிதாஸ் தேசாய்க்கு
சுவாமி விவேகானந்தர் எழுதியது.

கேத்ரி,
மே 1893.

அன்புள்ள திவான்ஜி சாஹேப்,

உங்கள் கடிதத்தை நீங்கள் எழுதியபோது என் கடிதம் உங்களுக்குக் கிடைக்கவில்லைபோலும். உங்கள் கடிதத்தைப் பார்த்து மகிழ்ச்சியும் வருத்தமும் ஒருங்கே அடைந்தேன். உங்களை ஒத்த இதயமும், அதிகாரமும், பதவியும் கொண்ட ஒருவரால் நேசிக்கப்படும் பாக்கியம் பெற்றதில் மகிழ்ச்சி; என் மனத்தூண்டுதல்கள் முற்றிலும் சரியாகப் புரிந்து கொள்ளாமல் போய்விட்டனவே என்பதில் வருத்தம். என்னை நம்புங்கள், உங்களை நான் ஒரு தந்தையெனவே நேசிக்கிறேன், மதிக்கிறேன். உங்கள் மீதும், உங்கள் குடும்பத்தின் மீதும் அளவற்ற நன்றி உணர்வு எனக்கு உண்டு.உண்மை இதுதான். சிக்காகோ செல்லும் விருப்பம் எனக்கு முன்பிருந்தே இருந்து வந்ததைத் தாங்கள் அறிவீர்கள். நான் சென்னையில் இருந்தபோது அங்குள்ளவர்கள் தாங்களாகவே மைசூர், இராமநாதபுரம் மன்னர்களுடன் சேர்ந்து என்னை வழி அனுப்ப எல்லா ஏற்பாடுகளையும் செய்தார்கள். எனக்கும் கேத்ரி மன்னருக்கும் இடையே நெருங்கிய அன்புப் பிணைப்பு உண்டு என்பதையும் தாங்கள் அறிவீர்கள். நான் அமெரிக்கா செல்லவிருப்பதை நான் அவருக்குக் கடிதத்தில் எழுதி வைத்தேன். தன் அன்பின் காரணமாக கேத்ரி மன்னர் நான் அமெரிக்கா செல்லுமுன் நான் அவரைச் சந்திக்க வேண்டும் என்று எண்ணினார். பகவான் அவருக்கு ஒரு வாரிசை வேறு அளித்திருக்கிறாரே. இங்கே கொண்டாட்டங்கள் நிகழ்ந்து கொண்டிருந்தன. நான் இங்கு வருவதை உறுதி செய்வதற்காக மன்னர் தன் தனிச் செயலரையும் சென்னைக்கு அனுப்பி அவ்வளவு தூரத்திலிருந்து என்னை அழைத்து வரச் செய்ததால் நான் வந்தே ஆகவேண்டியதாயிற்று. இதனிடையே நாடியாதிலிருந்த உங்கள் சகோதர

ருக்குத் தந்தி அடித்து நீங்கள் அங்கே இருக்கிறீர்களா என்று விசாரித்தேன். துரதிருஷ்டவசமாக எனக்கு பதில் கிட்டவில்லை. தன் மன்னருக்காக பாவம், இந்தச் செயலாளர் சென்னைக்கும் கேத்ரிக்குமாக அலைந்தவர் விழா நடப்பதற்குள் நாங்கள் கேத்ரி செல்லாவிட்டால் மன்னர் வருத்தமடைவார் என்று ஜெய்ப்பூருக்கே நேராகப் பயணச்சீட்டு வாங்கி விட்டார். வழியில் நாங்கள் திரு ரத்திலாலைச் சந்தித்தோம். என் தந்தி கிடைத்ததென்றும், பதில் அனுப்பப்பட்டதென்றும், திரு விஹாரிதாஸ் எனக்காகக் காத்திருப்பதாகவும் கூறினார். நீங்கள்தான் இவ்வளவு காலமாகப் பிறருக்கு நியாயம் வழங்கு பவராயிற்றே? இப்போது நீங்களே நிலைமையை எடைபோட்டுக் கொள்ளுங்கள். இந்த விஷயத்தில் நான் வேறென்ன செய்வது? நான் அங்கு இறங்கி இருந்தால் கேத்ரி விழாவுக்கு சமயத்தில் வந்து சேர்ந்திருக்க முடியாது; மறுபுறமோ என் எண்ணங்களைப் பிறர் தவறாகப் புரிந்து கொள்ளும் ஆபத்தும் உண்டு.

தாங்களும் தங்கள் சகோதரரும் என் மீது வைத்த அன்பை நான் அறிவேன். சிக்காகோ போகும் வழியில் நான் பம்பாய் சில நாட்களில் செல்ல வேண்டும் என்பதையும் நான் அறிவேன். ஆகவே, நான் திரும்பும் வரை நான் உங்களைச் சந்திப்பதைத் தள்ளிப் போடுவதே சரியான முடிவு என்று கருதினேன். உங்கள் சகோதரர்கள் என்னைச் சரியாக உபசரிக்காததால் நான் வருத்தமடைந்தேன் என்பது நீங்களே எண்ணிக்கொண்ட புதிய விஷயம். அவ்வாறு நான் கனவிலும் கருதவில்லை, மனத்தில் இருப்பதைப் புரிந்து கொள்பவரோ நீங்கள்! அடபகவானே!

விரோதங்கள் ஒருபுறமிருக்க ஜுனகடில் தாங்கள் சந்தித்த விளையாட்டும் குறும்பும் கொண்ட குற்றமில்லாதவனும் ஆகிய அதே இளைஞன்தான் நான். நான் உங்கள் மீது கொண்ட அன்பு மாறாமலோ நூறு பங்கு அதிகரித்தோதான் உள்ளது. நான் உங்களையும், தென்பாரதத்தின் பல திவான்களையும் என் மனத்தில் ஒப்பிட்டுப் பார்க்கும்போது தென்னிந்திய

அரசவைகளில் நான் உங்களை எந்த அளவு புகழ்ந்து பேசி னேன் என்பதற்குக் கடவுளே சாட்சி. (தங்கள் உயர்ந்த குணங் களை எடைபோட எனக்குச் சக்தி இல்லை.) இந்தச் சமாதானம் தங்களுக்குத் திருப்தி அளிக்காவிட்டால் ஒரு தந்தை மகனை மன்னிப்பதுபோல் என்னை மன்னிக்கும்படிக் கேட்டுக் கொள்கிறேன். எனக்கு இவ்வளவு நல்லவராக இருந்த ஒருவர் விஷயத்தில் நான் நன்றி கெட்டவனாக இருந்தேன் என்ற மனத்துயரம் எனக்கு வேண்டாம்.

தங்கள்
விவேகானந்தர்

பின் குறிப்பு:

நான் அங்கு இறங்காததால் உண்டான தப்பபிப்ரா யத்தை உங்கள் சகோதரர் மனத்திலிருந்து நீங்கள்தான் நீக்க வேண்டும்; நான் ஒரு பிசாசாகவே இருந்தால்கூட அவர்கள் காட்டிய அன்பினையும், செய்த உபசரணையையும் என்னால் மறக்க இயலாது.

மற்ற இரண்டு சுவாமிகள் என் குருபாயிக்கள். ஜுனகடில் போன தடவை உங்களைச் சந்தித்தவர்கள். ஒருவர் எங்கள் தலைவர். மூன்றாண்டுகள் கழித்து அவர்களைச் சந்தித்தேன். ஆபுவரை அவர் கூடவந்து பிறகு நான் பிரிந்தேன். வேண்டு மானால் நான் பம்பாய் போகும் வழியில் அவர்களை நாடியாத் அழைத்து வருகிறேன். உங்கள் மீதும் தங்கள் மனிதர்கள் மீதும் இறைவன் தன் ஆசிகளைச் சொரியட்டும்.

தங்கள்
விவேகானந்தர்

(தொடரும்)



# காட்சி மேடை - 22

## அஹமதாபாத், கட்டியாவாடு

அடுத்து நாம் சுவாமி விவேகானந்தர் மேற்குப் பாரதத்தில் குஜராத் கட்டியாவாடு பகுதியில் பயணம் செய்வதைக் காண்கின்றோம். இந்தக் கட்டத்தில் சுவாமிஜி பல அரசர்களையும், உயர் அரசு அதிகாரிகளையும் சந்தித்தார். அப்போதிலிருந்து கடவுள் நம் யோகியின் பாதையில் பல சுதேசி மன்னர்களை அறிமுகப்படுத்தி வைத்தார். யோகியாகவும், புனிதயாத்திரியாகவும் இருந்த அவர் வாய்ப்புக்கிடைத்தபோதெல்லாம் அவர்களோடு தங்கி இருந்தார்.

கேத்ரி மன்னரிடம் சுவாமிஜி கூறினார்: ''பழைய பாரதத்தில் பெருமை பெற்றிருந்தவர்கள் ராஜபுத்திரர்களாகிய நீங்கள்தான். நீங்கள் நலிவுற்ற போதுதான் தேசமே வீழ்ச்சியுற்றது. க்ஷத்திரியர்களின் குழந்தைகள், பிராம்மணர்களின் வாரிசுகளோடு ஒத்துழைத்தால்தான் பாரதத்தை உயர்த்த முடியும். இந்த ஒத்துழைப்பு அதிகாரத்தையும், செல்வத்தையும் பங்கு போட்டுக் கொள்வதற்காக அல்ல! எளியவர்கட்கு உதவிபுரிவதற்காக, அறியாமையில் உழல்பவர்கட்கு ஒளியூட்டுவதற்காக, மூதாதையரின் நாடு ஒளிகுன்றி நலியும்போது அதன் இழந்த பெருமையை மறுபடியும் நிலைநாட்டுவதற்காக;''

அவரைப்போன்ற துறவி ஒருவர் மன்னர்களின் உறவில் இவ்வளவு நேரத்தைச் செலவழிப்பானேன் என்று அவரிடம் கேட்டபோது, சுவாமிஜி தந்த எளிய விளக்கம் அனைவருக்கும் புரிந்தது. சுதேசி நாடுகள் பாரத மண்ணில் ஐந்தில் ஒரு பங்கு ஆகும். தம் குடிமக்களுக்காக சமூகநலத் திட்டங்களை நிறைவேற்றுமபடி மன்னர்களைச் சம்மதிக்க வைத்தால் பெரும் எண்ணிக்கையில் மக்கள் பலன் பெறுவார்கள். எப்போதும் மன்னர்களோடு இத்தகைய திட்டங்கள் பற்றி சுவாமிஜி பேசுவார். விருப்பம் இருந்ததோ இல்லையோ, மன்னர்கட்கு இத்தகைய பொறுப்புக்களை ஏற்கும் திறமை இல்லை.

மன்னர்களின் உபசரிப்பினைப் பெற்றாலும் சுவாமி விவேகானந்தர் நடந்து திரியும் தன் யாத்திரையை விட்டுவிடவில்லை. சமய சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த இடங்களைக்

கண்டார்; சாத்திர நூல்களை ஓதும் பணியைத் தொடர்ந்து ஆற்றினார்; பயணத்தின் போதும் தன் ஆன்மீகப் பயிற்சிகளைத் தொடர்ந்து செய்து வந்தார்.

அஹமதாபாதில் சுவாமிஜி பல சமண மத அறிஞர்களைச் சந்தித்தார். அவர்கள் அனுமதியுடன் சமண சமயப் புனித நூல்களைப் படித்தார். இவை சாதாரணமாக புறச் சமயத்தினருக்குக் கிடைப்பதறிது.

லிம்பிடியில் விவேகானந்தர் உள்ளூர்ப் பண்டிதர்களுடன் சம்ஸ்கிருதத்தில் உரையாடினார். இப்படிப்பட்ட ஒரு சந்திப்பின் போது புரி, கோவர்த்தன மடத்துச் சங்கராச்சாரியார் சுவாமி விவேகானந்தரைப் பற்றி மிக உயர்ந்த கருத்தினைத் தெரிவித்தார்.

சுவாமி விவேகானந்தருக்கு விருந்தோம்பித் தொண்டு புரிந்த மன்னர்கள் அரசு உயர் அதிகாரிகள் பலப்பலர். அவர்களில் லிம்பிடி டாக்கூர் சாஹேபும் ஒருவர். அந்த மன்னர் பிறகு சுவாமிஜியைத் தன் விருந்தினராக வைத்து உபசரித்தார்.

### ஜுனாகத்:

இந்த முஸ்லீம் சுதேசி நாட்டின் திவான் ஹரிதாஸ் விஹாரிதாஸ் சுவாமிஜியை உபசரித்தார்; ஆயுட்கால நண்பரும் ஆனார். கட்ச் மஹராஜாவும் பூஜ் திவானும் சுவாமிஜிக்கு நெருங்கியவர்கள் ஆனார்கள்.

ஜுனாகதில் உரையாடிக் கொண்டிருக்கும்போது சுவாமிஜி ஏசுகிறிஸ்து பற்றியும், மேற்கத்திய சமயச் சிந்தனைமீது ஹிந்து மதம் ஏற்படுத்திய பெரும் தாக்கத்தைப் பற்றியும் குறிப்பிட்டார். மத்திய மேற்கு ஆசியாவில் இனங்களுக்கு இடையே கருத்துப் பரிமாற்றம் நடந்ததைக் குறிப்பிட்டார். தட்சிணேசுவரத்து முனிவரின் வாழ்க்கை பற்றியும் குறிப்பிட்டார் பூஜில் அவர் திவானுடன் தங்கினார். அவருடன் நீண்ட விவாதங்கள் புரிந்தார்; ஜுனாகத் பிரதம மந்திரியுடன் பேசியதுபோலவே இங்கும் மக்களின் தொழில், விவசாயம், பொருளாதாரப் பிரச்சினைகள், அவர்களிடையே கல்வியைப் பரப்ப வேண்டியதன் அவசியம் பற்றிப் பேசினார். ஜுனாகதில் இருந்தபோது சுவாமிஜி கிர்நார் மலைசென்று தரிசித்தார். இங்குதான் பவஹாரிபாபா யோகப்பயிற்சியில் தீட்சை பெற்றார். இங்கு அவர் ஒரு குகையில் அமர்ந்து தியானம் புரிந்தார். ஜுனாகதி

விருந்து வெராவல், பாட்டன், சோம்நாத், (இதற்குப் புராண காலத்தில் ப்ரபாஸம் என்று பெயர்) ஆகிய இடங்கட்குச் சென்றார்.

## காட்சி மேடை - 23

### போர்பந்தர்

குஜராத்தின் தெற்குக் கடற்கரையில் அமைந்த சிறு துறைமுக நகரம்தான் போர்பந்தர். பழங்காலத்தில் அது கிருஷ்ணரின் தோழரான சுதாமாவின் பெயரால் சுதாமாபுரி என்று அழைக்கப்பட்டது.

போர்பந்தரில் சுவாமிஜி பதினொரு மாதங்கள் மகத்தான ஸம்ஸ்கிருத அறிஞரான பண்டித பாண்டுரங்க சாஸ்திரி என்ற பிரதம மந்திரியுடன் தங்கி இருந்தார். பண்டித பாண்டுரங்கர் அவ்வமயம் வேதங்களை மொழியாக்கம் புரியும் பணியில் ஈடு பட்டிருந்தார். இப்பணியில் தனக்கு உதவி புரியும்படி அவர் சுவாமிஜியை வற்புறுத்தினார். பண்டித பாண்டுரங்கர் ஐரோப் பாவில் பயணம் செய்தவர்; பல ஐரோப்பிய மொழிகளை அறிந்தவர். நீண்ட உரையாடல்களை அவர்கள் நிகழ்த்தினர். விவேகானந்தர் வேதக்கருத்துக்களின் அனைத்தையும் தழுவிய பொதுத் தன்மையைச் சார்ந்த புதிய கருத்துக்களை எடுத்து விளக்கினார். இது புதியதொரு உலகளாவிய சமயத்தின் முன் வடிவம் ஆகும். இது பழமைவாதங்கள் அனைத்தையும், பல்வேறு மதங்களின் பிரிவினை வாதங்களையும் ஒதுக்கித் தள்ளிவிடும் என்பது சுவாமிஜியின் கொள்கையாகும்.

இதற்குமுன் ஜுனாகதில் சுவாமிஜி உரையாற்றினார். ஹிந்து அனுபூதி, பண்பாடு இவற்றின் அடிப்படை மதிப்பீடுகள் பற்றிப் பேசினார். ஸ்ரீ ராமகிருஷ்ணரின் வாழ்க்கை, அவருடைய புரட்சிகரமான சமய ஒற்றுமை கொள்கைகள் பற்றி சுவாமிஜி குறிப்பிட்டார். பாண்டுரங்கரின் மனத்தை இவை கவர்ந்தன. ஆனால் அவர் குறிப்பிட்டார்: ''சுவாமிஜி இந்த நாட்டில் நீங்கள் பெரிதாக ஒன்றும் செய்துவிட முடியாது என்று அஞ்சுகிறேன். உங்களைப் பாராட்ட இங்கே ஆள் கிடையாது. நீங்கள் மேற்கு நாடுகட்குப் போகவேண்டும். அங்கே மக்கள் உங்களையும், உங்கள் பெருமையையும் புரிந்து கொள்வார்கள். சனாதன தருமத்தைப் பிரச்சாரம் செய்வதன்மூலம் நீங்கள் நிச்சயம் மேற்கத்திய பண்பாட்டுக்கும் விளக்கங்கள் தரமுடியும்.''

பாண்டுரங்க பண்டிதரின் யோசனையின் பேரில் விவேகானந்தர் பிரெஞ்சுமொழி கற்கத் துவங்கினார். ஐரோப்பாவில் தொடர்பு மொழியாக இது பயன்படும் என்று திவான் கருதினார்.

கிட்டத்தட்ட இந்தக் காலகட்டத்தில்தான் ஐக்கிய அமெரிக்க நாடுகளில் அடுத்த வருடம் நடக்க இருக்கும் சமய மகாநாடு பற்றி விவேகானந்தர் கேள்விப்பட்டார். போர்பந்தரில் சுவாமிஜி தன் குருபாயியாகிய சுவாமி திரிகுணாதீதானந்தரை எதேச்சையாகச் சந்தித்தார் திரிகுணாதீதானந்தர் ஒரு சாதுக்கள் கூட்டத்தில் சேர்ந்து சிந்து பாலைவனத்தில் இருந்த ஹிங்லாஜிற்குப் புனித யாத்திரை போய் கொண்டிருந்தார்.

சுவாமிஜி பிற்பாடு மாண்டவியில் அகண்டானந்தஜியை யும் சந்தித்தார். விவேகானந்தர் துவாரகை சென்று ஆதிசங்க ரர் நிறுவிய சாரதா மடத்தில் கொடுக்கப்பட்ட ஒரு அறையில் தங்கினார். இங்கு தன் அறையின் அமைதியில் பேரொளி ஒன்று தோன்றும் காட்சியைத் தரிசித்தார்.

பாண்டுரங்கரோடு தங்கிய நாட்களில் விவேகானந்தர் பெரிய மன உளைச்சலில் சிக்கி அமைதியின்றி இருந்தார். அவருக்குள் அளவற்ற சக்தி ஒன்று துடித்து வெளிவர வழி தேடிக் கொண்டிருந்தது. அவர் மனத்தில் மேலெழுந்த கருத்து பாரதத்தைப் புத்துயிர் பெற்று எழச்செய்வது எப்படி என்ற கேள்வியே. விழித்தெழுந்த பாரதம் உலகம் முழுவதற்கும் உதவ முடியும் என்பது சுவாமிஜியின் நம்பிக்கை. அற்பத்தனம், பொறாமை, ஒற்றுமை இன்மை, அறியாமை, வறுமை இவை இந்துக்களிடையே வேரோடி இருந்ததைக் கண்டு அவர் மனம் புழுங்கினார். ஒரு சன்னியாசிக்குத் தன் லட்சியத்தை எட்டு கின்றவரைக்கும் ஓய்வு ஒழிச்சல் என்பதே கிடையாது.

பாரததேசம் முழுவதும் சுவாமிஜி இதுவரை செய்த நீண்ட பயணங்கள் தன் குருநாதர் கூறியபடி பலத்தினைப் பெறுவதற் காகவே. குருநாதர் காட்டிய பாதை ஞானம், பக்தி, ராஜ யோகம், கர்மம் என்பவையே. தான் திரட்டியவற்றை அவர் நாடு முழுவதும் வாரி இறைத்தாக வேண்டும் உலகம் முழு வதும் வாரி இறைத்தாக வேண்டும். அச்சக்தியை இப்போது தன்னுள் உணர்ந்தார். ஸ்ரீகிருஷ்ணரின் தீபச்சுடரை அவர் துவாரகையில் கண்டது அவரைச் செயல்பட அழைத்தது.

சுவாமிஜிக்கு வரவரத் தன் லட்சியம் தெளிவாகத் தெரியத் தொடங்கியது. விதை ஊன்றப்பட்டு விட்டது. இதனை

அவர் பிற்காலத்தில் இவ்வாறு வெளிப்படுத்தினார். ''நான் பணிபுரிவதை நிறுத்த மாட்டேன். எங்கும் மனிதர்கட்குத் தெய்விகப்புத்துணர்ச்சி ஊட்டுவேன். இவ்வுலகம் முழுவதும் தெய்வமும் தானும் ஒன்றே என உணரும் வரை பணி ஆற்று வேன்.''

## காட்சி மேடை - 24

### பரோடா, கண்ட்வா

**பரோடா:** மாண்டவியிலிருந்து சுவாமி விவேகானந்தர் நாதியாட் வழியாக பரோடா வந்து பரோடா மகாராஜாவைச் சந்தித்தார். மகாராஜா சயாஜிராவ் கெய்க்வாடின் தேசபக்தி, தெம்பு, தீர்க்க தரிசனம் இவை விவேகானந்தரைக் கவர்ந்தது. அவரு டைய நூலகத்தையும் சென்று பார்த்தார். மந்திரி ஒருவரையும் சந்தித்து, நாட்டின் கல்விமுறை பற்றி விவாதித்தார் சுவாமிஜி.

**கண்ட்வா:** அடுத்து சுவாமிஜி கண்ட்வா போய்ச் சேர்ந்தார். அங்கு அவர் ஹரிதாஸ் சட்டர்ஜி என்ற உள்ளூர் வழக்குரைஞர் வீட்டில் மூன்று வாரங்கள் தங்கினார். ஆரம்பத்தில் ஹரிதாஸ் சட்டர்ஜி அவரை ஒரு சாதாரண சாதுவாக நினைத்து விட்டார். விரைவிலேயே மிகச்சிறந்த அறிஞர் என்று இனம் கண்டு கொண் டார். கண்ட்வாவில் தான் சுவாமிஜி சிக்காகோ சமய மகா நாட்டிற்குச் செல்லும் உத்தேசத்தை வெளியிட்டார். கண்ட்வாவிலிருந்து சுவாமிஜி இந்தோர் சென்றார். தொலை தூரக் கிராமங்கள் சிலவற்றுக்கும் அவர் சென்று பார்த்தா. இந்தக் காலகட்டத்தில் கொஞ்ச நாட்கள் சுவாமிஜி தோட்டி களின் காலனி ஒன்றில் வசித்தார். அவர்களின் பெரும் துயரம் கண்டு அவர் பெரிதும் மனம் உருகினார். அவர்கள் சமுதாயத் தடைகளினால் துன்புறுத்தப்படுவதையும் சுவாமிஜி பார்த்தார்.

### கடிதம் - 6

திரு ஹரிதாஸ் விஹாரிதாஸ் தேசாய்க்கு

பரோடா,
26 ஏப்ரல் 1892

அன்புள்ள திவான்ஜி சாஹேப்,

இங்கேயும் உங்கள் கடிதம் வந்ததில் மிகவும் மகிழ்ச்சி. நாதியாட் புகைவண்டி நிலையத்திலிருந்து, தங்கள் இல்லத்திற்கு கொஞ்சமும் சிரமம் இன்றிப்போய்ச் சேர்ந்தேன். உங்கள் சகோதரர்கள், சகோதரர்கள் எப்படி இருக்க வேண்டுமோ அப்படி

இருந்தார்கள். தங்கள் குடும்பத்தினை இறைவன் நன்கு ஆசீர் வதிக்கட்டும். என் பயணங்களின்போது இப்படி ஒரு புகழ் வாய்ந்த குடும்பத்தை நான் சந்தித்ததே இல்லை. தங்கள் நண் பர் திரு மணிபாய் எனக்கு எல்லா வசதிகளையும் செய்து கொடுத்தார். அவரை நான் இரண்டு தடவைகள் தான் சந்தித் தேன். ஒரு தடவை ஒரு நிமிஷம். இன்னொரு தடவை பத்து நிமிஷங்கள் சந்தித்தபோது இங்குள்ள கல்வி முறைப்பற்றி அவர் பேசினார். இங்குள்ள நூலகத்தையும், ரவிவர்மாவின் ஓவியங் களையும் கண்டேன். இங்கே பார்க்கத் தகுந்தவை அவ்வளவு தான். ஆகவே, இன்று மாலை பம்பாய் புறப்படுகின்றேன். இங்குள்ள திவான்ஜிக்கு (உங்களுக்கும்) என் நன்றி! பம்பாய் சென்று இன்னும் விபரம் எழுதுகின்றேன்.

அன்புள்ள தங்கள்
விவேகானந்தர்.

பி. கு.

நாதியாடில் நான் திரு மணிலால் நாபுபாயைச் சந்தித் தேன். அவர் கற்றறிந்தவர், பக்திமான், கண்ணியமானவர். அவருடன் உறவு எனக்கு மகிழ்ச்சிகரமானதாக இருந்தது.

## காட்சி மேடை-25

### மகாராஷ்டிரத்தில்

**பம்பாய்:**

விவேகானந்தர் பம்பாய் வந்தடைந்தது 189? ஜூலை கடைசி வாரத்தில். ராமதாஸ் சாபில்தாஸ் என்ற புகழ்வாய்ந்த சட்டவியல் அறிஞர் அவரை வரவேற்று உபசரித்தார். புகழ் வாய்ந்த அரசியல்வாதி ஒருவர் சுவாமிஜிக்கு கல்கத்தா செய்திப் பத்திரிகை ஒன்றைக் காட்டினார். திருமணச் சம்மதத்திற்கான வயது மசோதா பற்றிய கருத்துப் வேறுபாடுகளைப் பற்றிய செய்தி அதில் வந்திருந்தது. வங்காளி சமுதாயத்தில் படித்தவர் கள் கூட இந்த மசோதாவை எதிர்ப்பது பற்றி சுவாமிஜி அதிர்ச் சியும் வெட்கமும் அடைந்தார். சிறுவயதிலேயே பெண்களுக்குத் திருமணம் செய்து வைக்கும் அநியாயப் பழக்கத்தை சுவாமிஜி கடுமையாக எதிர்த்து வசைபாடினார்,

பம்பாயில் அவர் எதேச்சையாக சுவாமி அபேதானந்த ரைச் சந்தித்தார், பேசிக்கொண்டிருந்தபோது அவரிடம் கூறி னார்- ''சகோதரா, என்னுள் மாபெரும் சக்தி ஒன்று வளர்ந்து

பெருகி இருக்கின்றது! சில சமயம் என் உடம்பே வெடித்துச் சிதறிவிடுமோ என்று தோன்றுகின்றது!!

**பூனா:**

பம்பாயிலிருந்து சுவாமிஜி பூனா சென்றார். புகைவண்டியின் அதே பெட்டியில் பாலகங்காதர திலகரும் இருந்தார் (மாபெரும் தேசபக்தர், அரசியல்வாதி, அறிஞர் ஆவார் திலகர்). வழியனுப்ப வந்த நண்பர்கள் புகைவண்டி நிலையத்தில் அவர்களை அறிமுகம் செய்துவைத்து சுவாமிஜி பூனாவில் திலகருடன் தங்குவதென்றும் ஏற்பாடு செய்தார்கள்.

திலகருடன் சுவாமிஜி பூனாவில் பத்து நாட்கள் தங்கினார். சுவாமிஜி அவருடன் அத்வைத தத்துவம், வேதாந்தம் பற்றி உரையாடினார். மரியாதைக்குகந்த அந்த அரசியல்வாதி திலகர், பின்னாளில் நினைவு கூர்ந்தார்:

''சுவாமிஜி பிறருடன் கலந்துபழகுவதை தவிர்த்தார். அவரிடம் பணமே இல்லை. ஒரு மான்தோல், ஓரிரண்டு துணிகள், ஒரு கமண்டலர் இவையே அவரது உடைமைகள். அவர் பயணம் செய்யும்போது யாராவது அவர் செல்ல விரும்பிய இடத்துக்கு புகைவண்டிப் பயணச்சீட்டு வாங்கித் தருவார்கள். ''அந்தக் காலத்தில் நான் 'டெக்கான் கிளப்' பில் உறுப்பினர். ஹிராபாகில் வாரந்தோறும் கூட்டங்கள் நடைபெறும். கூட்டமொன்றுக்கு, சுவாமிஜி என்னுடன் வருகை புரிந்தார். அன்று மாலை காலம் சென்ற காசிநாத் கோவிந்த நாத் ஒரு தத்துவ விஷயம் குறித்து ஒரு நல்ல சொற்பொழிவினை ஆற்றினார். அதைப்பற்றிய கலந்துரையாடலில் யாரும் ஒன்றும் சொல்லவில்லை. சுவாமிஜி எழுந்து சரளமான ஆங்கிலத்தில் விஷயத்தின் மறுபக்கம் பற்றித் தெளிவாகப் பேசினார். அங்கிருந்த அனைவருமே அவருடைய மிகஉயர்ந்த திறமையை ஒப்புக் கொண்டனர். இச்சம்பவத்துக்குப் பிறகு விரைவிலேயே சுவாமிஜி பூனாவை விட்டுப் புறப்பட்டு விட்டார்.''

திலகர் குறிப்பிட்ட இன்னொரு விஷயம் விவேகானந்தர் பொதுக்கூட்டம் எதிலும் சொற்பொழிவாற்றவில்லை; அவர் பெயரைக் கேட்டபோது ''நான் ஒரு துறவிதான்'' என்று பதில் கூறினார். லிம்ப்டி டாக்கூர் ஸாஹேப் மஹாபேலேசுவரத்தில் இருப்பதாகக் கேள்விப்பட்டு சுவாமிஜி அவரைச் சந்திக்க

அங்கே சென்றார். தம்முடன் லிம்பிடி வந்து நிரந்தரமாக அங் கேயே தங்கிவிடும்படி டாக்கூர் சாஹேப் சுவாமிஜியைக் கேட் டுக் கொண்டார். சுவாமிஜி பதில் சொன்னார்:- ''இப்போது வேண்டாம். நான் செய்துமுடிக்க வேண்டிய வேறு வேலைகள் இருக்கின்றன. நான் இப்போது ஓய்வெடுக்க இயலாது.''

## கோலாப்பூர்:

அடுத்தபடியாக சுவாமிஜி கோலாப்பூர் சென்றார்; அங் கிருந்த மன்னர் தன்னை 'சத்திரபதி என்றும் சிவாஜியின் மக னான ராஜாராமின் வழிவந்தவர் என்றும் கூறிக்கொண்டார். மகாராணி சுவாமிஜியின் பக்தை ஆனார்.

## பெல்காம்:

கோலாப்பூரிலிருந்து சுவாமிஜி பெல்காம் சென்றார். பாட்டே என்ற மராட்டி கனவானின் விருந்தினராகத் தங்கினர். துறவிகள் பற்றிப் பொதுமக்கள மனத்தில் நிலவி வந்த பல அபிப்ராயங்களை சுவாமிஜி தகர்த்தெறிந்தார். வெற்றுடம்பாக இராமல் சுவாமிஜி பனியன் அணிந்திருந்தார். புகைப்பிடித்தார், வெற்றிலை போட்டுக் கொண்டார், பாக்குப் போட்டுக் கொண் டார், மீனும் சாப்பிட்டார். இது பாட்டே இல்லத்தினருக்கு அதிர்ச்சி அளித்திருக்க வேண்டும்; இந்தத் துறவியின் குருநாதர் ஒரு பிடிவாதமான ஆசாரமுடையவராக இருக்க வேண்டாம் என்று இத்துறவிக்குச் சொல்லி இருப்பது அவர்களுக்குத் தெரி யாது. சாதகரின் இயற்கைக்கு உகந்த வழியில் சென்று இறை வனை அடைவதே லட்சியம்; சடங்குகளில் சிக்கிக் கொள்வதல்ல. ஆனால், சுவாமிஜி தன் குருநாதரைப் பற்றி எதுவும் சொல்ல வில்லை. எளிய விளக்கங்கள் தந்து வேதங்கள் இவ்விஷயங்களை அனுமதிப்பதை மேற்கோள் காட்டினார்; அவர் திரும்பத் திரும்ப கூறுவதுண்டு. ''வேதாந்தம் என்பது, பலவீனமான வயிறுகளால் சிரணிக்க முடியாத கடினமான மாமிசம்'' என்று.

## பெல்காம் (தொடர்ச்சி)

இந்த அற்புதமான துறவி பற்றிய செய்தி நகரம் எங்கும் பரவிற்று. சுவாமிஜியைக் கண்டு போக வரிசை வரிசையாகப் பொதுமக்கள் வந்து சென்றார்கள். ஒரு இளைஞன் முதுகலைத் தேர்வுக்கு அமர அஞ்சி அவரிடம் தீட்சை பெற வந்தான். பரீட்சையில் தேறுவதைவிட துறவு சாதனைகள் அதிகக் கடின மானவை என்று கூறி சுவாமிஜி அவனைத் திருப்பி அனுப்பி விட்டார். இன்னொருவர் ஒரு சனாதனி ஹிந்து சுவாமிஜியுடன் வாக்குவாதம் புரிந்தார். வாதத்தில் தோற்று முரட்டுத்தனமாகப் பேசத் தொடங்கினார்: சுவாமிஜி அவரை முரட்டுக குதிரை என்று வர்ணித்தார்; முரட்டுக் குதிரை ஓடியாடிக் களைத்து, தன் கட்டுக்கடங்காத சக்தி அனைத்தையும் செலவழித்த பின் தான் பயிற்சி அளிப்பவர் அதற்குள் கொஞ்சம் கட்டுப்பாட்டைத் திணிக்க முடியும். இந்த விஷயத்தில் அவர் குதிரைப் பயிற்சி தருபவரின் உத்தியைக் கையாண்டார். ஒரு விவாதத்தின்போது சுவாமிஜி சுடச்சுடப் பதிலடி தொடுத்தார். ஆனால் அவரிடத் தில் துவேஷம் என்பது சிறிதும் இல்லை. இந்த யோகி வெறுப்பையும் கெட்ட எண்ணத்தையும் வென்று ஒழித்து விட்டார். அவர் இதயம் குற்றமற்ற எளிமையால் நிரம்பி வழிந்தது. ஹரிபாத மித்ரா என்ற வனத்துறை அதிகாரி கேட்டுக் கொண்டதன்பேரில் சுவாமிஜி அவருடைய விருந்தினர் ஆனார். மித்ராவும் அவருடைய மனைவியும் சுவாமிஜியிடமிருந்து மந்திர தீட்சை பெற்றார்கள்; வனத்துறை அதிகாரி தன் நாட்குறிப்பில் குறிப்பிட்டார். ''அவருக்கு எந்தத் தேவையுமே இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. ஏனெனில் சுயலாபம் என்ற எண்ணமே அவருக்கு இல்லை.''

நம்பிக்கை பற்றி அவர் குறிப்பிட்டார். '' 'நம்பிக்கை தான் எல்லாச் சமயங்களுக்கும் அடிப்படை' என்று நான் கூறினேன். சுவாமிஜி புன்னகை புரிந்து கூறினார்: ஒரு மனிதன் மன்னனாகிவிட்டால் அவனுக்குத் தேவைகள் எதுவுமே இரா. ஆனால் மன்னனாவது எப்படி! இதுதான் கடினம். நம்பிக்கையை ஒருவருக்கு வெளியிலிருந்து ஊட்ட முடியுமா?'' பாட்டேயின் இல்லத்தில் சுவாமிஜி அதிகம் பேசியது வேதாந்தத்தின்

உபதேசங்களை அனைவரிடத்திலும் பரப்ப வேண்டும் என்பதே. இதில் சாதிமத வித்தியாசம் பாராட்டக்கூடாது. வேதாந்தம் என்பது அனைவரும் ஒன்று என்ற மனப்பாங்குடன் போதிக்கப் பட வேண்டும்.

பெல்காமில் சுவாமிஜி சிக்காகோ சமய மகாநாட்டுக்குப் போகும் தன் எண்ணத்தை வெளிக்கூறினார்; ஹரிபாத பாபு பயணச் செலவுக்குப் பணம் திரட்ட விரும்பினார். சுவாமிஜி அவரைத் தடுத்து விட்டார்.

## காட்சி மேடை - 26

**பங்களூர்**

சுவாமிஜியின் புனிதப் பயணம் அதன் நிறைவை நெருங்கிக் கொண்டிருந்தது. சுப்ரிநாயக் என்ற சம்ஸ்கிருத அறிஞரின் வேண்டுகோளின் பேரில் சுவாமிஜி பெல்காமிலிருந்து மர்மகோவா வந்து சேர்ந்தார்; புகைவண்டி நிலையத்தில் அவரை வரவேற்க, நூற்றுக்கணக்கில் மக்கள் வந்து சேர்ந்தனர்; அவரை சுப்ரி நாயக்கின் இல்லத்துக்கு ஊர்வலமாக அழைத்துப் போனார்கள். இந்த ஹிந்துத் துறவியைப் பற்றி அறிய கிறிஸ்தவ மிஷனரிகளிடையே நல்ல ஆர்வம் இருந்தது. சுவாமிஜி ஜே. பி. ஆல்வாரெஸ் என்பவரைச் சந்தித்தார். ஆல்வாரெஸ் வேறெங்கும் கிடைக்காத கிறிஸ்தவக் கடவுள் இலக்கிய லத்தீன் நூற்களைப் பயிலவே சுவாமிஜி கோவா வந்திருக்கிறார் என்று அறிந்து கொண்டார். அவர் ராஞ்ச்சோல் செமினரியில் தங்க ஏற்பாடு செய்தார். இங்கே சுவாமிஜி மூன்று நாட்கள் தொடர்ந்து நூல்களைப் பயின்றார். வெகு தொலைவிலிருந்தும்கூட சுவாமிஜியைச் சந்திக்கப் பல கிறிஸ்தவப் பாதிரிமார்கள் வந்தனர். சுவாமிஜி கோவாவைவிட்டுப் புறப்படுமுன் ஹிந்துக்கள் ஏற்பாடு செய்த வழியனுப்பு விழாவில் எல்லாச் சமுதாயங் களிலிருந்தும் மக்கள் கலந்து கொண்டனர்.

கோவாவிலிருந்து பெங்களூர் வந்த சுவாமிஜி பற்றிய செய்தி மைசூர் திவான் ஸர். கே. சேஷாத்ரி ஐயருக்கு எட்டிற்று. துறவி இளைஞர்; அற்புத ஒளிபெற்றவர்.

அப்போது மைசூரை ஒரு ஹிந்து மகாராஜா ஆண்டு வந்தார். முதல் சந்திப்பிலேயே விவேகானந்தரின் கம்பீரத் தோற்றம் திவானைக் கவர்ந்திழுத்தது. திவான் சுவாமிஜியை தெய்விகசக்தி கொண்டவர்; நாட்டின் வரலாற்றில் தன் முத்தி ரையைப் பதிக்கப் போகிறவர் என்று வருணித்தார். ''அவரு டைய சிந்தனையின் பிரகாசம், கவர்ந்திழுக்கும் ஆளுமை, பரந்த

படிப்பறிவு, கூர்ந்த சமய திட்சண்யம் இவை மகராஜாவைக் கவர்ந்திழுத்தன. மகாராஜா சுவாமிஜியை விருந்ினராக அரண்மனையில் தங்க வைத்துக்கொண்டார். ஒருநாள் தன் உயர் அதிகாரிகள் முன்னிலையில் மகாராஜா சுவாமிஜியை வினவினார். ''சுவாமிஜி என் அரசவை அங்கத்தினர்கள் பற்றி உங்கள் கருத்து என்ன?'' சுவாமிஜி தைரியமாக விடை இறுத்தார்: ''மன்னரின் இதயம் மிக நல்லது என்று நான் கருதுகிறேன். ஆனால் துரதிருஷ்டவசமாகத் தங்களைச் சூழ்ந்திருக்கும் அரசவையினர் முகஸ்துதிக்காரர்கள். எங்கு போனாலும் அரசவையினர் ஒரே மாதிரி இருக்கின்றார்கள்.''

மன்னர் மறுத்தார். ''ஆனால் என் பிரதம மந்திரி அப்படிப்பட்டவர் அல்ல. அவர் அறிவாளி. நம்பத் தகுந்தவர்''.

சுவாமிஜி: ''ஆனால் மன்னரே, பிரதம மந்திரி என்பவர் மன்னரிடமிருந்து திருடி (ஆங்கில அரசின்) அரசியல் பிரதிநிதிக்கு (லஞ்சம்) கொடுப்பவர்தான்.''

மகாராஜா உரையாடலைத் திசைதிருப்பி விட்டார் பிறகு சுதேசி நாடுகளில் தன் அபிப்ராயங்களை வெளிப்படையாகக் கூறும் விஷயத்தில் கவனமாக இருக்கும்படி சுவாமிஜியை மன்னர் எச்சரித்தார். பொல்லாதவர்கள் சுவாமிஜிக்கு விஷம்கூட வைத்து விடுவார்கள்.

சுவாமிஜி சீறி எழுந்தார்: ''என்ன நேர்மையான ஒரு துறவி உண்மையைச் சொல்வதற்குப் பயப்படுவாரா? இதில் அவர் உயிரையே விலையாகக் கொடுக்க வேண்டி இருந்தால் தான் என்ன? உங்களுடைய குமாரனே தங்களைப் பற்றி என் கருத்தைக் கேட்டால் உங்களிடம் இல்லாத நற்குணங்கள் தங்களிடம் இருப்பதாகவா நான் கூறுவேன்? என்னால் ஒருபோதும் பொய் சொல்லமுடியாது!''

ஒருதடவை சுவாமிஜி சம்ஸ்கிருத அறிஞர்கள் கூட்டம் ஒன்றில் பேசினார். அவருடைய வேதாந்த ஞானத்தை அவர்கள் பாராட்டினார்கள். மன்னரின் அவையில் இருந்த ஒரு ஆஸ்திரியா நாட்டு இசைவாணருடன் பேசியபோது சுவாமிஜியின்மேல் மேல்நாட்டுச் சங்கீத ஞானத்தினைப் பார்த்து இசைவாணர் ஆச்சரியம் அடைந்தார். தன் அமெரிக்கப் பயணத்திட்டம் பற்றி மகாராஜாவுடன் சுவாமிஜி விவாதித்தார். மன்னர் சுவாமிஜியின் பயணச் செலவுகளைத் தான் ஏற்க முன்வந்தபோது சுவாமிஜி மறுத்தார். ராமேஸ்வரம் சென்ற பிறகுதான்

தாம் இறுதி முடிவு எடுக்கப் போவதாகக் கூறினார். மகாராஜா வும், பிரதமரும் விலை உயர்ந்த பரிசுகளை ஏற்றுக்கொள்ளும் படி சுவாமிஜியை வற்புறுத்தினர். சுவாமிஜியோ மன்னரிட மிருந்து ஒரு புகைக்குழாயையும், மந்திரியிடமிருந்து ஒரு சுருட் டையும் மட்டும் ஏற்றுக்கொண்டார்.

## காட்சிமேடை - 27

### திருவனந்தபுரம்

பங்களூரிலிருந்து சுவாமிஜி எர்ணாகுளம், திருச்சூர் சென்று விட்டு 1892 டிசப்பரில் திருவனந்தபுரம் வந்து சேர்ந்தார். விவேகானந்தர் பேராசிரியர் கே.எஸ். சுந்தரராம ஐயரின் இல் லத்தில் தங்கினார். தென்பாரதத்தில் பிராம்மணர்கள் பெரிதும் சாதி கர்வம் கொண்டிருப்பதை சுவாமிஜி கவனித்தார். ஒரு தடவை ஒரு ''தாழ்ந்த சாதிக்காரர்'' ஒரு பிராமணருக்கு அளித்த மரியாதையை அப்பிராமணர் அந்த ''தாழ்ந்த சாதிக் காரருக்கு'' அளிக்கவில்லை என்று சுவாமிஜி பிராமணரைக் கண்டித்தார். பிற்பாடு அந்த பிராமணர் சுவாமிஜியை வணங் கியபோது சுவாமிஜி 'பட்'டென்று 'நமோ நாராயணாய' என்று மட்டும் கூறி நிறுத்திக் கொண்டுவிட்டார். அந்த பிராமணர் அவமானப்படுத்தப் பட்டதாக உணர்ந்தார். சுவாமிஜி கூறினார் ''நாராயணமேனனின் வணக்கத்துக்குப் பதில் வணக்கம் சொல் வதில் நீங்கள் உங்கள் மரியாதையையும், சம்பிரதாயத்தையும் காட்டினீர்கள்; உங்கள் மரியாதையை ஏற்பதில் நான் துறவி கட்கு உரிய சம்பிரதாயத்தை காட்டினால் நீங்கள் அதில் கோபமடைவானேன்?''

இன்னொரு சந்தர்ப்பத்தில் பேராசிரியர் சுந்தரம்பிள்ளை என்ற திராவிடக் கல்வி அறிஞர் தன் இன உணர்வுகளை வெளிப்படுத்தியபோது சுவாமிஜி அதை எதிர்த்தார். இன்னொரு சமயம் விஞ்ஞானிகள் மனிதனின் விஞ்ஞான நம்பிக்கைகள் பற்றிய கருத்துக்களைக் கொஞ்சம் அதிகப்படி யாகவே புகழ்ந்து பேசினார்கள். சுவாமிஜி அவற்றைக் கடுமை யாக வசைபாடினார். ''சமயத்தில் மூட நம்பிக்கைகள் இருக் கின்றன என்றால் விஞ்ஞானத்திலும் அதற்கான மூட நம்பிக்கை கள் இருக்கத்தான் செய்கின்றன. மனித இயற்கை, சுபாவம் பற்றிய விதிகளைப் புரிந்து கொள்வதிலும் மனித உயிரின் புலன் கட்கு அப்பாற்பட்ட அம்சங்களை ஆராய்ந்து பார்ப்பதிலும் மேற்கத்திய விஞ்ஞானம் தவறுகள் இழைத்திருக்கிறது'' என்று சுவாமிஜி கருத்துத் தெரிவித்தார்.

அறிவாளிகளுள் திருவிதாங்கூர் பிராந்திய மொழிக் கழக இயக்குநர் சுவாமிஜியின் மீது ஆழ்ந்த பற்றுதல் கொண்டார். தன் வீட்டில் பிக்ஷா (துறவிகட்கு உணவிடல்) ஏற்கும்படி வேண்டிக் கொண்டார். மன்னர் மார்த்தாண்டவர்மா சுவாமிஜியைச் சந்தித்தார். சுவாமிஜியின் ஆளுமை அவரைக் கவர்ந்தது. சுவாமிஜியை ஒரு நல்ல புகைப்படம் எடுத்து சென்னை அருங்காட்சியகத்தில் நுண்கலைக் காட்சியில் காட்சிக்கு அனுப்பினார் மன்னர்.

சுவாமிஜி பரவலாகப் பல விஷயங்கள் பற்றிப் பேசினார்; மகளிர், சாதி, உணவு இவைபற்றி. 'லலித விஸ்தாரம்' என்ற நூலில் இருந்து பல பாடல்களைச் சொக்க வைக்கும் தன் இனிய குரலில் பாடி கேட்போரை மயங்க வைத்தார். சுவாமி விவேகானந்தர் திருவனந்தபுரத்தில் பேராசிரியர் ஐயருடன் ஒன்பது நாட்கள் தங்கினார்; ஐயர் தன் அனுபவத்தினை 'நவராத்திரி அற்புதம்' என்று வருணித்தார்.

''எங்கள் ஒவ்வொருவருடனும் சுவாமிஜி மிக இனிமையாக, கனிவுடன் மிகக் கண்ணியத்துடன் பழகினார். சுவாமிஜி பல தமிழ்ச் சொற்களைக் கற்றுக்கொண்டு எங்கள் வீட்டுச் சமையற்கார பிராமணருடன் தமிழில் பேசுவதில் பெரு மகிழ்ச்சி அடைந்தார். எங்களிடையே புதியவர் ஒருவர் இருக்கிறார் என்றே எங்களுக்குத் தோன்றவில்லை. அவர் புறப்பட்டுச் சென்றபோது கொஞ்ச நாள் எங்கள் இல்லத்திலிருந்து பிரகாச ஒளியே வெளிச் சென்று விட்டதைப் போலிருந்தது''.

## காட்சி மேடை - 28

### ராமேஸ்வரம்

சுவாமி விவேகானந்தர் ராமேஸ்வரம் வந்து சேர்ந்தார். பாரதத்தின் நான்கு பெரும் புண்ணியத்தலங்களாகிய 'தாம்'-களில் அவர் அலையும் துறவியாக கடைசியில் வந்து தரிசித்த தலம் இதுதான். ராமநாதபுரம் ராஜா பாஸ்கர சேதுபதியை அவர் சந்தித்தார். பிறகு பாஸ்கர சேதுபதி சுவாமிஜியின் தீவிர பக்தரானார். சுவாமிஜி மன்னருடன் பாரத நாட்டுப் பாமர மக்களுக்குக் கல்வி அறிவு புகட்டுவது, விவசாய முறைகளைத் திருத்தி மேம்படுத்துவது உள்படப் பல விஷயங்கள் குறித்து உரையாடினார்; தன் கருத்துக்களைக் கூறினார். சிக்காகோ சமய மகாநாட்டில் சென்று பாரதப் பிரதிநிதியாக உரையாற்றும்படி மன்னர் சுவாமிஜியை வேண்டிக்கொண்டார். பண உதவி செய்வதாகவும் உறுதி அளித்தார்; தான் இது

பற்றி ஒரு முடிவு எடுத்த பின் மன்னருக்குத் தெரிவிப்பதாக சுவாமிஜி பதிலிறுத்தார். பிற்காலத்தில் சுவாமிஜி அமெரிக்கா வுக்குக் கப்பலேறிய போது மன்னர் உதவிகள் புரிந்தார்.

இக்காரணங்களினால் சுவாமிஜி தன் பெருமை வாய்ந்த வெளிநாட்டுப் பயணத்தை முடித்துக் கொண்டு பாரதம் திரும்பிய போது அவர் முதன் முதலில் ராமநாதபுரத்தில் (நாட்டில்) அடியெடுத்து வைத்தது மிகப் பொருத்தமே. ராஜ்யத்தில் அரசின் சார்பில் ஒரு தங்கப்பேழையில் வைத்து வரவேற்புப் பத்திரம் அளிக்கப்பட்டது. இது மக்களும் மன்ன ரும் சுவாமிஜி மீது வைத்திருந்த பேரன்பையே காட்டுகின்றது.

சுவாமிஜி அவ்வரவேற்புரையில் ''யதிராஜர்'' (துறவி வேந்தன்) என்றும், திக்விஜய கோலாஹலர் ''திசைகள் எங்கும் வெற்றிகொண்டு மகிழ்பவர்'') என்றும் ஸ்ரீமத் பகவான் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸ-கரகமல-ஸஞ்சாத, ராஜாதிராஜ சேவித (ஸ்ரீமத் பகவானான ஸ்ரீராமகிருஷ்ணரின் கரத்தாமரை யால் ஆசீர்வதிக்கப்பட்டவர், ராஜர்களின் ராஜாவாலும வணங்கப்படுவர்) என்றெல்லாம் போற்றப்பட்டார்.

## காட்சி மேடைகள் - 28,29

### கன்னியாகுமரி

சுவாமி விவேகானந்தர் நிலத்தின் இறுதிப்பாகமான பாரதத்தின் தென்கோடிமுனையான கன்னியாகுமரிக்கு வந்து சேர்ந்தார். இங்கே அவர் கண்களின் முன்னால் கங்காசாகரம், சிந்துசாகரம், இந்துமாக்கடல் இவை சந்திக்கும் காட்சி விரிந்தது. அவர் கண்ணில் தெரிந்தது, பசுமைநிறைந்த மலையடிவாரத்தில் மணலும், பாறையும் கடலும் இணையும் அற்புதக் காட்சி. பாரதத்தின் தென்கோடியில் அவர் வியப்பும் ஆச்சரியமும் கொண்டு நின்றார். அவருடைய பயணம் நிறைவேறிவிட்டது -நிறைவேறிவிட்டதா? அவர் கண்ட காட்சி அவரைத் திணற அடித்தது. அளவிறந்த வானப்பரப்பும், கடலும் தொலை தூரத்தில் தொடுவானத்தில் இணையும் காட்சி காலம் கடந் ததாக, நிரந்தரமானதாகத் தென்பட்டது அவர் ஒரு குழந் தையைப் போல குதூகலித்தார். பராசக்தியின் கோயிலுக்கு ஓடிச்சென்று அவளை வழிபட்டார். கன்னியாகுமரியின் முன் னிலையில் அவர் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்கினார்.

கோவிலை விட்டு வெளியே வந்தார். கடலைக்கண்டார். கரையிலிருந்து சிறிது தூரத்தில் கடலிலிருந்து மேலெழுந்த ஒரு

பாறை அவர் கண்ணில் தென்பட்டது. அப்பாறை காந்தமென அவரைக் கவர்ந்திழுத்தது. அவருக்கு அங்கே போகவேண்டும் போலிருந்தது. அங்கிருந்த ஒரு படகில் அவர் அப்பாறைக்குப் போயிருக்கலாம். ஆனால், படகுக்காரனுக்குக் கொடுக்க சுவாமி ஜியிடம் பணம் இல்லை.

அவரால் பொறுத்திருக்க முடியவில்லை; பாறையைச் சென்று அடைந்துவிட வேண்டும் என்ற ஆவல் அவரை உந்தித் தள்ளிற்று. அவர் கடலில் குதித்து நீந்தத் தொடங்கினார்; அவருடைய பலம்வாய்ந்த கரங்களினால் அலைகளைத் தள்ளி நீந்தினார்; அந்த நீர்நிலையில் வாழ்ந்த சுறாமீன்களைக் கண்டு அவர் அஞ்சவில்லை; பாறையைச் சென்றடைந்தார். மேலேறி பாறையில் அமர்ந்தார். கடந்துசென்ற நீண்ட சரித்திரகாலத்தை எண்ணிப் பார்த்தார். அவர் இதயம் உணர்ச்சிவசப்பட்டுத் துடித்தது. பனிமூடிய இமயச் சிகரங்களிலிருந்து தென்கோடி முனை வரையிலான புனிதப்பயணம் நிறைவுபெற்று விட்டது. பாரத தேசத்தின் நீளம் முழுவதும் அவர் பயணம் செய்து விட்டார்; அவருடைய அன்புக்குரிய தாய்நாடும் அவருடைய மண்ணுலகத்தாயும் அவருக்குச் சொர்க்கத்திலும் இனியவை அன்றோ!

அந்தப் பாறையில் அமர்ந்தவராய் தன் கண்ணால் கண்ட அனைத்தையும் நினைத்துப் பார்த்தார். பாரதத்தின் பாமர மக்களின் பரிதாபத்துக்குரிய நிலைமை, ஆள்பவர்கள், நில உரிமையாளர்கள், புரோகிதர்கள் இவர்களின் நேர்மையற்ற தான்தோன்றித்தனங்களுக்குப் பாமரர்கள் பலியாகும் பரிதாபம், இவற்றைக் கருதிப் பார்த்தார். சாதி எனும் கொடுங்கோன்மை இப்பாமரர்களின் ஜீவசக்தியின் கடைசித்துளியையும் உறிஞ்சி விழுங்கிவிட்டது. மக்கள் விடுதலையைப் பற்றி கோபுரத்தின் மீதேறிக் கூச்சலிட்டவர்களில் பலர் அப்பட்டமான சுயநல வாதிகள் என்பதை அவர் கண்டார். தன் பணி என்ன? அவர் தன்னைத்தானே கேட்டுக் கொண்டார். இவ்வுலகை ஒரு மாயக் கனவாகக் கருதிப் புறக்கணித்துவிட்டுத் தனிமையில் சென்று கடவுளைச் சேரவேண்டுமா? இப்படிச் செய்ய அவர் பல தடவைகள் முயன்றிருக்கிறார். அதில் எல்லாம் அவருக்குத் தோல்வியே கிட்டிற்று. ஒரு துறவியாகிய அவர் கடவுளுக்கே கடவுளுக்கு மட்டுமே அடிபணிந்து தொண்டு புரிவதென விரதம் எடுத்திருப்பதை நினைவுபடுத்திக் கொண்டார். ஆனால் இந்தக் கடவுள் மனித குலத்தின் உருவத்திலேயே அவர் முன் தோன்றினார். கடவுளுக்குத் தான் ஆற்ற வேண்டிய தொண்டு

பாரதத்தின் பாமர மக்களுக்குத் தொண்டாற்றுவதிலிருந்து துவங்க வேண்டும் என்று அவர் எண்ணியது இதனால்தான். அவர் கூறினார்: ''நான் திரும்பத் திரும்பப் பிறந்து ஆயிரம் துன்பங்களில் உழன்றாலும் சரி; நான் நம்புகின்ற ஒரே கடவுளுக்கு வழிபாடு செய்வேன். அந்தக் கடவுள், எல்லா ஜீவாத்மாக்களின் ஒட்டு மொத்தமான சேர்க்கைதான். அனைத்துக்கும் மேலாக, என் கடவுள் பொல்லாதவர்கள் வடிவத்திலும், துயரத்தால் பீடிக்கப்பட்டவர்கள் வடிவத்திலும், எல்லா இனங்களிலும் உள்ள ஏழைகளின் வடிவத்திலும் எழுந்தருளுவார்.'' ஆனால் இதற்கான வழி என்ன? தெளிவான பார்வை உடைய அந்த தீர்க்கதரிசி பாரத தேசத்தின் முதுகெலும்பு சமயமே என்பதைக் கண்டார். பாரதம் விழித்தெழும்; புத்துணர்வும், புனர் நிர்மாணமும் கொண்டு எந்த ஆன்மீகப் பேருணர்வு பாரதத்தை என்றென்றும் தேசங்களின் வளர்ப்பிடமாகவும், சமயங்களின் தொட்டிலாகவும் ஆக்கிற்றோ அந்த உயர்நிலைக்குப் பாரதம் திரும்ப எழும். வெளிநாட்டு விமர்சகர்களும் அவர்களின் உள்நாட்டு அடிவருடிகளும் சமயம் தான் பாரதத்தின் வீழ்ச்சிக்குக் காரணம் என்றனர். சுவாமி விவேகானந்தர் அவர்கள் கூற்றை முற்றிலுமாக மறுத்தார். சமயம் என்ற பெயரில் பின்பற்றப்படும் பொய்த்தனம், மூடநம்பிக்கை, வெளிவேஷம், இவற்றின் மீதே அவர் பழியைப் போட்டார். மனிதனின் பலமும் ஞானமும் தோன்றும் இடம் மனிதனுக்குள் இறைவன் இருக்கிறான் என்ற உண்மையில் இருந்துதான் என்று சுவாமி விவேகானந்தர் கண்டறிந்தார். உறங்கிக் கிடக்கும் இந்த தெய்வீகத் தன்மையைத் தட்டி எழுப்ப சுவாமிஜி உறுதி பூண்டார். ஹிந்து சமயத்தின் கருப்பொருள் தியாகமும், சேவையும்தான். இவ்விரு லட்சியங்கள்தான் பாரதப் பண்பாட்டைப் பெற்றெடுத்துக் காத்து வளர்த்து வருபவை என்று சுவாமிஜி அறிவார். நம் தேசிய வாழ்வினை இவ்விரு வாய்க்கால்களில் தீவிரமாகச் செலுத்தினால் மற்றவை எல்லாம் தன்னைத்தானே கவனித்துக்கொள்ளும் என்று சுவாமிஜி நம்பினார். பாரதத்துக்குப் புத்துயிரூட்டப்புகும் தொண்டர்கள் சுயநலத்தை, பொறாமையை, பேராசையை, பதவி மோகத்தை, அறவே துறந்து ஏழைகள், கற்றறியாதோர், பசியுற்றோர், நோயுற்றோர் இவர்களின் தொண்டில் தன்னைத்தானே அர்ப்பணிக்க வேண்டும். இவ்வெளியவர்களே கடவுளின் தெளிவான புறத்தோற்றங்களாகக் கருதவேண்டும். மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கு அவர்கட்கு உணவு வேண்டும், கல்வி வேண்டும், ஆரோக்கியம் வேண்டும், விஞ்ஞான, தொழில்நுட்ப அறிவு வேண்டும். வெறும் வயிற்றுடன் இருப்பவனுக்கு வேதாந்தம் போதிப்பதும் வெறும் பைத்தியக்காரத்தனம். வறுமையாலும், அறியாமையினாலும் பீடிக்கப்பட்டு எங்கும் பாமர மக்கள் மிருகங்களைப்போல் வாழ்கின்றனர். அவர்களின் வாழ்க்கைத் தரம் மேம்பட வேண்டும்.

## கன்னியாகுமரி (தொடர்ச்சி)

இந்த மாபெரும் பணியில் தனக்குதவும் சகோதரத் தொண்டர்களை சுவாமிஜி எங்கிருந்து கொண்டு வருவார்? அவருக்குத் தேவை கடவுளின் முழுநேரத் தொண்டர்கள், உலக பந்தங்களும், சுயநல ஆசைகளும் இல்லாத தொண்டர்கள். அவருக்கு ஆயிரக்கணக்கில் தொண்டர்கள் தேவைப்பட்டனர். கடவுளைத் தேடி உலகைத் துறந்த எண்ணிறந்த துறவிகள் மீது அவர் பார்வை விழுந்தது. ஆனால் துரதிருஷ்வசமாக நிகழ்கால பாரதத்தில் இவர்களில் பெரும்பான்மையோர் பயனற்ற வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக்கின்றார்கள். அவர்களுக்குள் புதிய சக்தியைச் செலுத்தி அவர்கள் மக்கள் பணியில் ஈடுபட அவர்களை அவர்தான் தூண்ட வேண்டும். அவர் மனத்தில் ஒரு திட்டம் உதித்தது. பிற்காலத்தில் அவர் இத்திட்டத்தைத் தம் நண்பர் ஒருவருக்கு எழுதிய கடிதம் ஒன்றில் வெளிப்படுத்தினார். சுவாமிஜி குறிப்பிட்டார் ''சுயநலமற்ற சில துறவிகள் பிறருக்கு நன்மைபுரியும் உறுதிபூண்டு கிராமம் கிராமமாகச் சென்று கல்வியறிவைப் பரப்பவேண்டும் 'தீண்டத்தகாதவர் வரை தாழ்ச்சியுற்ற அனைவருடைய நிலையையும் பல்வேறு விதங்களில் உயர்த்த வேண்டும் வாய் வழிபோதனை மூலமாகவும், வரைபடங்கள், படஒளிப்பெட்டிகள், கோளங்கள் போன்ற கருவிகள் மூலம் கற்பிக்கலாம். அது காலப்போக்கில் நன்மை விளைவிக்காதா? இத்திட்டங்கள் அனைத்தையும் நான் இந்த சிறு கடிதத்தில் குறிப்பிட முடியாது. சுருங்கச் சொன்னால் மலை முகமதுவிடம் வராவிட்டால் முகமது மலையருகில் போகத்தான் வேண்டும்; ஏழைகள் பள்ளிக்கூடம் செல்ல முடியாது. கவிதையும் அதுபோன்றவற்றைக் கற்று அவர்கட்கு என்ன லாபம்? ஒரு தேசம் என்ற முறையில் நாம் நம் தனிச் சிறப்புக்களை இழந்து விட்டோம் இத்தேசம் இழந்த தன் தனிச்சிறப்பை அதற்கு மீட்டுத்தர வேண்டும்; பாமரர்களை உயர்த்த வேண்டும்.

கன்னியாகுமரியில் சுவாமிஜி தீர்க்கதரிசனமும், தேசபக்தியும் ஒருங்கே கொண்டு திகழ்ந்தார். அங்கு அவர் (பிற்காலத்தில் ஒரு மேலைநாட்டுச் சீடருக்குக் கூறியதுபோல,

''பாரதத்தின் குறுகிய வடிவம் ஆனார்''. ஆனால் இதற்கான பண வசதி எங்கிருந்து வரும்? அவர் தன் பெரும் கனவை நன வாக்குவது எப்படி? அவரோ ஒரு காசும் கையில் இல்லாத சன்னியாசி. இந்த நாட்டுச் செல்வந்தர்களோ பெரிது பெரி தாகப் பேசுகின்றார்களே ஒழிய நடைமுறையில் ஒன்றும் செய்வ தாகத் தெரியவில்லை. ஏழைகளே சுவாமி விவேகானந்தரின் ஆதரவாளர்கள்.

திடீரென ஒரு அதிதீவிரமான சிந்தனை அவர் மனத்துள் எழுந்தது. அவர் வெளி உலகத்தினரை அணுகி அவர்கள் மனச் சாட்சியை வேண்ட வேண்டும். ஆனால் அவர் சுயமரியாதை உள்ளவர். பிச்சை எடுக்க அவரால் இயலாது. பாரத நாட்டின் ஆரோக்கியமும், நோயும் இந்த உலகம் முழுவதையும் பாதிக் கின்ற விஷயம் என்று மேலை நாட்டவருக்குச் சொல்ல விரும்பி னார் சுவாமிஜி. பாரதம் முழுகிப் போய்விட்டால் உலகம் முழுவதும் அதனுடன் சாக வேண்டியதுதான். ஆகவே வெளி உலகத்துக்குப் பாரதம் வேண்டும். அதன் ஆன்மா, கடவுள் பற்றிய கருத்துக்கள் தேவைப்படும்; பாரதத்தின் ஆன்மீகப் பாரம்பரியம் வேண்டும். பற்றின்மை, துறவு என்ற மனப் பூர்வமான சுதந்திர லட்சியம் வேண்டும். உலகாயதவாதம், புலன் இன்பம் என்பவற்றின் கூர்ப்பிடியிலிருந்து தன்னை வெளிக்கொண்டுவர மேலைநாடுகட்கு பாரதத்தின் இந்த நற்குணங்கள் தேவைப்படும்.

பாரதத்தின் கடைசி முனையின் அருகே கடலினுள் பாறையின் மீது அமர்ந்து மௌனத்தவம் புரிந்து கொண்டி ருந்த சுவாமிஜிக்கு இப்போது திவ்விய தரிசனம் கிட்டிற்று. அவர் கண்களின் முன் அமெரிக்கா எனும் புதிய கண்டம் தெரிந்தது. எதிர் காலத்தில் நம்பிக்கை உள்ள நாடு. பெரும் செல்வம் உடைய நாடு. திறந்த கையும், தாராள மனமும் உடைய நாடு. அவர் அமெரிக்காவை வாய்ப்புக்கள் நிறைந்த நாடெனக் கருதினார். அங்கு மக்களின் மனத்தில் சாதிகள், வர்க்கங்கள் என்ற பிளவுகள் இல்லை. சுமைகள் இல்லை. அவர் திறந்த மனம் கொண்ட அமெரிக்கர்கட்கு பாரதத்தின் பழம்பெரும் ஞானத்தை அளித்து அதற்கு மாற்றாக விஞ் ஞானத் தொழில் நுட்ப அறிவினை அங்கிருந்து தம் தாய் நாட்டுக்குக் கொண்டுவரத் திருவுள்ளம் கொண்டார். அவருடைய அமெரிக்க லட்சியப் பயணம் வெற்றிபெற்றால் மேலை நாடுகளில் பாரதத்தின் கௌரவம் மேலெழுந்து

மதிப்புப் பெறும். அது மட்டுமல்ல, நம் நாட்டவரிடமும் ஒரு புதிய தன்னம்பிக்கை பிறக்கும். சிக்காகோவில் நடக்க இருக்கும் சமய மாநாட்டில் பாரதத்தின் பிரதிநிதியாக அவர் செல்ல வேண்டும் என்று தன் நண்பர்கள் தீவிரமாக வேண்டிக் கொண்டதை அவர் நினைவுபடுத்திக் கொண்டார். அவர் மேலை நாடுகட்குச் செல்ல வேண்டும் என்று முதன் முதலில் தெம்பூட்டிய காட்டியாவாடு நண்பர்களின் சொற்களை அவர் குறிப்பாக நினைவில் கொண்டார். ''செல்லுங்கள்; அவர்களைப் புயல் எனத் தாக்குங்கள்; பிறகு திரும்ப வாருங்கள்.''

அவர் பாரதத்தின் நிலப்பகுதிக்குத் திரும்ப நீந்தி வந்து கிழக்குக் கடற்கரை வழியே வடக்கு நோக்கிப் பயணத்தைத் துவங்கினார்.

## காட்சி மேடை - 31

### துறவி தன் உடலையே தியாகம் செய்ய முன் வந்தது

பரிவ்ராஜகர் என்ற அலையும் துறவியின் வாழ்க்கை மேடுகளும் பள்ளங்களும் நிறைந்தது. பல சம்பவங்கள் குறித்து சுவாமிஜி மௌனம் சாதித்தார். அவருடைய மனம் எப்படி இயங்கிற்று என்று அறிவதற்கு ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத பல இடைக்கால சம்பவங்களைப்பற்றி நாம் அறிந்து கொள்ள வேண்டும். அவை மிகவும் சுவாரசியமானவை.

ஒருதடவை சுவாமிக்கு ஒரு தீவிரமான சந்தேகம் வந்தது. அந்த ஐயப்பாடு வீடு வீடாகப் பிச்சை எடுத்துண்ணும் தன் வாழ்க்கையைப் பற்றியது. ''எனக்கு உணவிடுவதில் இந்த ஏழைகட்கு என்ன லாபம்?'' ஒருபிடிச் சோறு மிஞ்சினால் அவர்களுடைய குழந்தைகட்காகுமே! அது எப்படியானாலும் கடவுளை அடைய என்னால் இயலாவிட்டால் நான் உடலைத்தாங்கி வாழ்ந்திருந்து என்ன பயன்?'' என்றெல்லாம் சுவாமிஜி எண்ணினார்.

இனிமேல் பிச்சை எடுப்பதில்லை என்று அவர் முடிவெடுத்தார். துறவின் மிகத் தீவிர நிலையில் அவர் இருந்தார். இத்தகைய மனப்பாங்கில் சாதகன் உடம்பே போனால்தான் என்ன என்று எண்ணுவான்.

நம்முடைய துறவி அடர்ந்த காடு ஒன்றினுள் நுழைந்தார். அதனூடே ஒருநாள் முழுவதும் ஒரு வாய் உணவும் பெறமுடியாமல் நடந்து கொண்டே இருந்தார். இரவு வந்ததும் இவரும்

கீழே சாய்ந்து ஒரு மரத்தடியில் இறைவனை நினைத்துக் கொண்டு இருந்தார். நேரம் சென்றது. இருட்டிலிருந்து ஒரு புலி வெளிவந்தது. சுவாமிஜி பார்த்தார். அது நெருங்கி நெருங்கி அருகே வந்தது. சுவாமிஜி அசையாமல் அமர்ந்திருந்தார். அவர் எண்ணினார் ''இதுதான் சரி, நம்மிருவருக்குமே பசிதான். இந்த உடலைக் கொண்டு பரம்பொருளைத்தான் தரிசனம் செய்ய முடியவில்லையே! பசித்த இந்த மிருகத்துக்கு இது உணவாவது பொருத்தம்தான்.'' இந்த எண்ணம் மனத்திலெழ அவர் தரையில் படுத்து அமைதியாக, கலவரப்படாமல் கிடந்தார். அந்தப் புலியும் கொஞ்சம் தள்ளி உட்கார்ந்து கொண்டது. சிறிது நேரம் கழித்து அது போய்விட்டது. விவேகானந்தர் அங்கே இருந்து கானகத்தின் கடும் நிசப்தத்தில் இறைவனின் சித்தத்தை எண்ணிக் கொண்டு காத்திருந்தார். அவர் தியானம் புரியும் போது மாபெரும் சக்தி ஒன்று அவர்மீது பொழிவது போன்று உணர்ந்தார். அதன் முக்கியத்துவம் அவருக்கு மட்டும் தான் தெரியும். நடந்தது என்னவென்றால் அத்துறவி ஒரு புலிக்குத் தன் உடலைத் தந்துவிடச் சித்தமானார். ஏதோ ஒரு காரணத்திற்காக அவர் ஆபத்தின்றி விடப்பட்டார்.

## சுவாமிஜியின் நூலிலிருந்து ஒரு பகுதி

சம்பவங்கள் நடந்து கொண்டே இருந்தன. பத்து வருடங்கள் ஒளி ஒன்றும் கிட்டவில்லை; என் ஆரோக்கியம் சீர்குலைந்து கொண்டே இருந்தது. நீண்டகால அடிப்படையில் நோக்கினால் இவை உடலை பாதிக்கத்தான் செய்கின்றன. சிலசமயம் இரவு ஒன்பது மணிக்கு ஒரு சாப்பாடு. இன்னொரு சமயம் காலை 8 மணிக்கு ஒரு சாப்பாடு. அடுத்த சாப்பாடு இரண்டு நாட்கள் கழித்து. அதற்கடுத்தது மூன்று நாட்கள் கழித்து. எப்போதும் மிக எளிய, மிக முரட்டுத்தனமான உணவு. பிச்சைக்காரனுக்கு யார் தன்னிடம் இருக்கும் நல்லவற்றைக் கொடுப்பார்கள்? போதாதற்கு பாரதத்தில் மக்களுக்கே போதுமான உணவு இல்லை. சில நேரத்தில் பெரும்பாலும் நடக்கவேண்டி இருக்கிறது. பனிபடர்ந்த சிகரங்களில் ஏறுதல், சில சமயம் ஒரு வயிறு உணவுக்காகப் பத்து மைல் கடினமான மலை ஏறுதல், ஒரு வயிற்றுக்குப் போதுமான உணவினைச் சேர்க்க சில சமயம் நான் வீடுவீடாகப் போகவேண்டி இருக்கும்! சில சமயம் ரொட்டி மிகக் கடினமாக இருக்கும்; அதைத் தின்றால் என் வாயில் ரத்தம் வரும்! அதைக் கடித்தால் பல்லே உடைந்து விடும்! அப்போது அதனை ஒரு பாத்திரத்தில் போட்டு ஆற்றுத்

தண்ணீரை அதன்மேல் ஊற்றுவேன். மாதம் மாதமாக நான் அவ்வாறு உணவுண்டு வாழ்ந்தேன். அது என் உடல் ஆரோக்கியத்தைப் பாதிக்கத்தான் செய்தது.

- சுவாமி விவேகானந்தர்
(ஆங்கிலத் தொகுதி பகுதி-8 பக்கம்-84)

## காட்சிமேடை - 32

### ஒரு திபெத்தியக் குடும்பத்தினருடன் தங்கிய சம்பவம்

ஹிமாலயத்தில் அலைந்து திரியும்போது விவேகானந்தர் ஒரு திபெத்தியக் குடும்பத்தினருடன் தங்கியிருந்தார். அவர்கள் வழக்கப்படி ஒரு மனைவி பல கணவன்களைத் திருமணம் செய்து கொண்டிருந்தாள். ஆறு சகோதரர்கள் ஒரு மனைவியுடன் வாழ்ந்து வந்தனர். ஓரளவுக்கு அறிமுகம் ஆனவுடன் சுவாமிஜி தன் கருத்தை வெளிப்படையாகக் கூறி கடுமையாக இவ்வழக்கத்தைக் கண்டித்தார். சுவாமிஜி ஒழுக்கம் பற்றிய நெறிமுறைகளைக் கண்டிப்பாகக் கடைபிடிப்பவர் அல்லவா? ஆண்களில் ஒருவர் எரிச்சல் அடைந்த குரலில் கூறினார்: ''சாதுவான தாங்கள் எங்களைப் பார்த்து 'சுயநலத்துடன் இரு' என்று கூறலாமா? இந்தப் பொருளை நான் மட்டும்தான் வைத்துக் கொள்ளவேண்டும். பிறருக்குக் கொடுக்காமல் நானே அனுபவிக்க வேண்டுமென்று கூறலாமா?'' என்றார். இந்த பதிலைக்கேட்டு சுவாமிஜி பெரிதும் ஆச்சரியமுற்றார். ஒழுக்கம் பற்றிய விதிகள் இடத்திற்கு இடம், சந்தர்ப்பத்துக்குச் சந்தர்ப்பம் மாறும் என்று புரிந்து கொண்டார்.

எதைப்பற்றி வேண்டுமானாலும், அதற்குச் சாதகமாகவும், விரோதமாகவும் விவாதிக்கலாம்; சமுதாயத்தில் நல்லது கெட்டது என்பது வெவ்வேறு கோணங்களிலிருந்து காணப்படுவது. சமூக உறவுகளில் இதுதான் நல்லது இதுதான் கெட்டது என்று அதில் தொடர்பு கொண்ட மக்களை விலக்கி வைத்துவிட்டுப் பேசமுடியாது.

## காட்சிமேடை - 33

### இரு ஆங்கிலேயரைச் சந்தித்த சம்பவம்

சுவாமி விவேகானந்தரின் மனஅமைதி, இருவினை ஒப்பு இவற்றை விளக்க ஒரு உதாரணமாகத் திகழ்வது. அவர் ஒரு ரயில் பெட்டியில் இரு ஆங்கிலேயர்களுடன் மோதிக்கொண்ட நிகழ்ச்சியாகும்.

ராஜபுதனத்தில் அத்துறவி ஒரு ரயில் பெட்டியில் பயணம் செய்து கொண்டிருக்கையில் தன்னுடன் இரு வெள்ளையர்கள் இருப்பதைக் கண்டார். இந்தியரான, அலைந்து திரிபவரான சுவாமிஜி அப்பெட்டியில் தம்முடன் இருப்பதை ஆளும் வர்க்க அங்கத்தினரான அவ்விருவரும் விரும்பவில்லை. அவரைப்பற்றி ஏளனமாக நகைச்சுவையுடன் ஆங்கிலத்தில் தமக்குள் உரையாடிக் கொண்டனர் அவர்கள் அங்கிலத்தில் பேசிக்கொண்டதால் ஆங்கிலம் அறியாதவராகிய இந்த சாதுவுக்குத் தம் உரையாடல் புரியாது என்று கருதிக் கொண்டனர். அது அவர்கட்கு இன்னும் சிரிப்பை ஊட்டிற்று. வேடிக்கையாக இருந்தது. அப்போது ஒரு வண்டி நிலையத்தில் ரயில் நின்றது. சுவாமி விவேகானந்தர் புகைவண்டி நிலைய அதிகாரியைத் தம்மருகே அழைத்து ஒரு டம்ளர் தண்ணீர் வேண்டும் என்று கேட்டார்.

இந்த வேண்டுகோள் ஆங்கிலத்தில் வெளிவந்தது. இப்போது ஆங்கிலேயர்கள் தர்மசங்கடத்தில் ஆழ்ந்தனர். சுவாமிஜியைக் கேட்டனர். தாம் பேசிய விதம் குறித்து ஏன் தன் கோபத்தைக் காட்டவில்லை என்றனர். துறவி பதிலிறுத்தார்: ''நண்பர்களே! முட்டாள்களை நான் சந்திப்பது இது முதல் தடவை அல்லவே''. குற்றமிழைத்தவர்கள் சுவாமிஜி கூறிய சொற்களைச் சீரணித்துக் கொள்வதைத் தவிர வேறென்ன செய்ய?

## காட்சிமேடை - 34

### ஆயிரக்கணக்கில் இத்தகைய நல்ல மனிதர்கள் . . . . .

ராஜபுதனத்தில் ஓரிடம்; சமய போதனை, அறிவுரை வேண்டி மக்கள் மூன்று நாட்கள் இரவும் பகலும் சுவாமிஜியிடம் வந்த வண்ணம் இருந்தனர். சுவாமிஜிக்கு ஓய்ச்சல் ஒழிவு இல்லை. அவருச்கு உணவோ ஓய்வோ வேண்டும் என்று யாருக்கும் கவலை இல்லை. எல்லோரும் கலைந்துபோனபின் ''தாழ்ந்த சாதி''யைச் சேர்ந்த ஒரு ஏழை மிகவும் தயக்கத்துடன் அவருக்கு சமைக்காத உணவுப்பொருள்களை அளிக்க முன்வந்தார். தான் ஒரு 'தீண்டத்தகாதவராக' இருந்ததால் சுவாமிஜிக்கு சமைத்த உணவை அளிக்க அவர் தயங்கினார். இருப்பினும் சுவாமிஜி அன்பு இதயம் கொண்ட அந்த ஏழையைத் தனக்கு உணவு சமைக்கும்படி வற்புறுத்தி அதனைச் சுவைத்து உண்டார். நன்றிக் கண்ணீர் பெருக்கியவாறு சுவாமிஜி தனக்குத் தானே கூறிக்கொண்டார். ''ஆயிரக்கணக்கான பேர் இப்படிப்பட்ட நல்லவர்கள் குடிசைகளில் வாழ்கின்றார்கள், நாமோ

அவர்களைத் 'தீண்டத்தகாதவர்கள்' என்று வெறுத்து ஒதுக்கு கின்றோம்.''

**''பாமர மக்களுக்கு நாம் ஆற்ற வேண்டிய கடமை''**

'பாரதத்தில் எல்லாத் தீமைகட்கும் அடிப்படையாக இருப்பது ஏழை மக்களின் நிலைமைதான்'. நம்முடைய ''தாழ்ந்த வகுப்பு'' மக்களுக்குச் செய்யவேண்டிய ஒரே பணி அவர்கட்குக் கல்வி அளித்து அவர்கள் இழந்துவிட்ட தனிச் சிறப்பை அவர்களிடம் வளர்த்து விடுவதுதான். இதுவரை இந்தத் திசையில் எப்பணியும் நடக்கவில்லை; பூசாரிகளின் சக்தியும், வெளிநாட்டாட்சியும் அவர்களை நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக மிதித்து நசுக்கி வைத்திருக்கின்றன. இப்போது பாரதத்தின் ஏழைகள் தாம் மனிதர்கள் என்பதையே மறந்து விட்டார்கள். அவர்கட்கு நாம் சொல்லித்தர வேண்டும். அவர் களைச் சுற்றியுள்ள உலகில் என்ன நடக்கிறது என்று அறியும் படி அவர்களுடைய கண்களைத் திறந்துவிட வேண்டும்; தன்னு டைய விடுதலைக்கான வழியை அவர்களே அமைத்துக் கொள் வார்கள். ஒவ்வொரு நாடும் மனிதனும் பெண்ணும் தனது கதிமோட்சத்துக்கான பணிகளைத் தானே செய்து கொள்ள வேண்டும்; அவர்கட்கு நற்கருத்துக்களைப் போதியுங்கள்; இது தான் அவர்கட்குத் தேவையான ஒரே உதவி; மற்றதெல்லாம் அதன் விளைவாகத் தானே நடக்கும்; நம் பணி ரசாயனப் பொருள்களை ஒன்றிணைத்து வைப்பதுதான். இயற்கையின் விதிகட்கு உட்பட்டு படிகமாதல் தானே நிகழும். இந்தப் பணியைத் தான் நாம் பாரதத்தில் ஆற்றவேண்டும்; நீண்ட காலமாக இந்த எண்ணம் என் மனத்தில் இருந்து வருகின்றது. ஏழைகட்குக் கல்வி கற்பிப்பதான பணியில் இருக்கும் பெரிய இடைஞ்சல் இதுதான்; ஒவ்வொரு கிராமத்திலும் மாட்சிமை பொருந்திய மன்னராகிய தாங்கள் ஒவ்வொரு கல்விக்கூடம் திறப்பாக வைத்துக் கொள்வோம். அதுவும்கூட நன்மை விளை விக்காது. ஏனெனில் பாரதத்தில் இருக்கும் கொடும் வறுமை காரணமாக ஏழைப்பையன்கள் பள்ளிக்கு வராமல் வயலில் தந்தைக்கு உதவி புரியவோ வேறு வழியில் சம்பாதிக்கவோ போவதைத்தான் அதிகம் விரும்புவார்கள். ஆகவே மலை முகமதுவிடம் வராவிட்டால் முகமது மலையிடம் போகவேண்டும். ஏழைப்பையன் கல்விகற்க வரமுடியாவிட்டால் கல்வி அவனைச் சென்றடைய வேண்டும். ஆயிரக்கணக்கில் நம் நாட்டில் துறவிகள் இருக்கின்றார்கள் அவர்கள் குவியும் மனமும்

(ஏகாக்கிர சித்தமும்) சுயநலத்தியாகமும் கொண்டவர்கள். இவர்கள் ஊர் ஊராகச் சென்று சமய போதனை செய்கின்றார்கள். அவர்களில் சிலரையாவது ஆசிரியர்களாகப் பயிற்றுவித்தால் சமயம் சாராத அறிவு விஷயங்களையும் கற்பிக்கப் பயிற்சி அளித்தால் அவர்கள் ஒவ்வொரு இடமாக, வீடு வீடாகச் சென்று சமயமும், பொதுக்கல்வியும் அளிப்பார்கள். இதில் இரண்டு பேர் ஒரு மாலைப்பொழுதில் ஒரு காமெரா, ஒரு பூகோளம், சில வரைபடங்கள் இவற்றை எடுத்துக்கொண்டு ஒரு கிராமத்துக்குப் போனால் அறியாத மக்களுக்கு, விண்மீனியல், பூகோளநூல் இவற்றில் நிறையப் பாடங்கள் கற்பிக்கலாம். பல்வேறு தேசங்கள் பற்றிக் கதைகள் சொல்லி ஏழை மக்களுக்குத் தகவல் அறிவு தரலாம். இதனால் ஏழைகட்குச் செவிவழியாக நிறையக் கல்வி அறிவு அளிக்கலாம். அவர்கள் ஆயுள் முழுவதும் புத்தகங்களில் இருந்து கற்பதைவிட நூறு மடங்கு அதிகம் கற்க முடியும்.''

— சுவாமி விவேகானந்தர்
(''முழுத்தொகுதி நூல்கள்'' பகுதி IV பக்கம் 361)

(தொடரும்)



## காட்சிமேடை - 35

### "தீண்டத்தகாதவர்களுடன்" தங்கி இருத்தல்

சுவாமி விவேகானந்தர் செல்வ வளத்தின் இடையில் தியாகத்தைக் கண்ணால் காண விரும்பினார். ஏழைமக்களும், பலவீனமானவர்களும் காட்டும் தியாகமும், தீயதை எதிர்க்காத குணமும் அவருக்கு முக்கியமானவையாகத் தென்படவில்லை ஏனெனில் அவர்களிடத்தில் தானம் கொடுக்கும் சக்தியோ, தீமையை எதிர்த்து நிற்கும் தெம்போ கிடையாது. வறுமையை ஆன்மிக மதிப்பீடுகளின் அடிப்படையில் நியாயப்படுத்திவிட முடியாது. விளக்கிவிடவும் முடியாது. சமூகக் கொடுங்கோன்மையையும் ஒழித்துக்கட்ட முடியாத வறுமையையும் கண்டு சுவாமிஜி மிகவும் கலவரமடைந்தார்.

மத்திய பாரதத்தில் இத்தகைய நிலையில் சுவாமிஜி இருந்தார். அங்கு மக்கள் பழமைவாதத்திலும் நிறைய சாதி துவேஷங்களிலும் மூழ்கி இருந்தனர். தம்முடைய சலுகைகளை நியாயப்படுத்துவதற்காகவும், துரதிருஷ்டசாலிகளை நசுக்குவதற்காகவும் மிகவும் சௌகரியமாக சாத்திரங்களிலிருந்து மேற்கோள் காட்டினார். கண்ட்வாவுக்கு அருகில் மிகத்தூர கிராமங்களை அவர் சென்று பார்த்துக் கொண்டிருந்தார். அவர் கூறினார்: "சமயம் இங்கே சமையல் அறையில் மட்டுந்தான் பின்பற்றப்படுகின்றது. தீண்டாமை என்பது "தாழ்ந்த சாதிக் காரர்களை" வெறுப்பதாக ஆகிவிட்டது" சுவாமிஜியே பல நாட்கள் உணவும், தங்கும் இடமும் இன்றி இருக்க வேண்டியதாகிவிட்டது.

இந்நிலையில் அவர் ஒருநாள் தோட்டிகளின் காலனி ஒன்றுக்குள் வந்தார். இவர்களை சமுதாயம் தாழ்ந்த சாதிக் காரர்கள் என்றும், விலக்கி வைத்து தீண்டத்தகாதவர்கள் என்றும் வெறுத்து ஒதுக்கியது. ஆனால் அவர்களோ மகத்தான பணிவுணர்வையும் இதயத்தின் மிக உயர்ந்த குணங்களையும் வெளிக்காட்டி தம்முடன் வசிக்க வந்த துறவிக்குத் தொண்டு புரியும் வாய்ப்பினைப் பயன்படுத்திக் கொண்டனர்.

விவேகானந்தர் அவர்களுடைய சமுதாயத்துக்கு ஆற்றக் கூடிய பணியும் நற்குணங்களும் வீணாகிக் கொண்டிருப்பதை

சுவாமிஜி கண்டார். இதில் அவருக்கு மிகவும் வருத்தம். அவருடைய சகோதரத் துறவி ஒருவர் குறிப்பிட்டதைப்போல அவர் இதில் 'கம்பீரமான வருத்தம்' அடைந்தார். புத்தர் உணர்ந்தது போல் நாட்டின் ஆன்மீகப் பண்பாட்டு வாழ்வின் முக்கியப் பகுதிகளிலிருந்து பெரும்பகுதி பாமர மக்கள் விலகி இருப்பதை அவர் உணர்ந்தார். ஹிந்து அனுபவத்தின் (சமயத்தின்) லாபங்களை அவர்களும் பெற்று மகிழவேண்டும், அவர்களுக்கும் தொண்டு புரிந்தாக வேண்டும். எல்லோரையும் முக்தி என்ற வழியில் அழைத்துச் சென்றாக வேண்டும். வேதாந்தம் எந்த ஒற்றுமையையும், உலகளாவிய தன்மையையும் நாம் உணர வேண்டும் என்று விரும்புகின்றதோ அந்த உணர்வுகளை அடைய நாம் பாமர மக்களுக்குத் தொண்டு புரியவேண்டும். சமூகத்தின் நன்மை, நல்லொழுக்கம் இவற்றைப் பற்றி விவேகானந்தரின் கருத்துக்களின் ஆதாரம் இந்த மகத்தான சிந்தனையே. ஆன்மீக வளர்ச்சி, ஆன்மீக சக்திகளை வெளிப்படுத்துதல் ஆகிய முழுமையான பாரதப் பார்வையின் அங்கமாகவே அவர் சமுதாய மாற்றங்களையும், பாமர மக்களை உயர்த்தும் பணியையும் கண்டார்.

## "நவபாரதம்"

''சூத்திர வகுப்பினர் தம் சூத்திரத்தன்மையுடனேயே மேலெழும் காலமும் வரத்தான் போகின்றது. இப்போது சூத்திரர்கள் வைசியர் அல்லது க்ஷத்திரியர் ஆகியோரின் சிறப்புக் குணங்களைப் பெற்றுக்கொண்டு மாமனிதர்கள் ஆகின்றார்களே அந்த விதத்தில் அல்ல. ஒருகாலம் வரும் அதில் ஒவ்வொரு நாட்டு சூத்திரனும் தன் உடன்பிறந்த சூத்திர இயற்கை, பழக்க வழக்கங்கள் இவற்றுடன் (வைசியர்களைப்போல, க்ஷத்திரியர்களைப்போல தன் சுபாவம் ஆகிவிடாமல்) ஒவ்வொரு சமுதாயத்திலும் மிகஉயர்ந்த நிலையை அடைவார்கள். மேற்கு நாடுகளில் மெல்ல மெல்ல இந்த புதிய சக்தி தலைதூக்க ஆரம்பித்திருக்கின்றது. சிந்தனையாளர்கள் இந்தப் புதிய ஆரம்பம் எங்கே சென்று முடியும் என்று கேட்டு மண்டையை உடைத்துக் கொள்கின்றார்கள். சோஷலிஸ, அனார்க்கிஸம் நிகிலிஸம் (சூன்யவாதம்) ஆகியன எல்லாம் பின்னால் வரப்போகும் சமூகப் புரட்சியின் முன்னறிவிப்புக்கள். அளவுக்கு மீறிய சுமைகள், கொடுங்கோன்மை இவை காரணமாக பன்னெடுங்காலமாக சூத்திரர்கள் அனைவருமே அற்பத்தனமான அடிமை மனப்பாங்குடனும், மேல் சாதிக்காரர்களின் காலை நக்கிக்கொண்டு வெறும் மிருகங்களைப் போல

மனிதத்தனமே இன்றியும் வாழ்கின்றார்கள். ஒவ்வொரு தடவையும் அவர்களுடைய நம்பிக்கைகளும், மேலே எழும் விருப்பங்களும் தகர்த்தெறியப்படுகின்றன. அதனால் லட்சிய உறுதிப்பாடும் செயலில் தொடர்ந்து ஈடுபடும் ஊக்கமும் அவர்களிடத்தில் இல்லாமல் போய் விட்டன.

மேலை நாடுகளில் கல்வி பரவியிருந்த போதிலும் சூத்திர வகுப்பினரை மேலே எழச் செய்வதில் பெரும் இடைஞ்சல்கள் இருக்கின்றன. அது நல்ல அல்லது கெட்ட குணங்கள் உள்ளுறையாக இருப்பதை அடிப்படையாக வைத்து சாதியைத் தீர்மானிப்பதுதான். இந்த மாதிரி வகைப்படுத்தும் சாதி முறை இந்தியாவில் பழங்காலத்தில் இருந்ததால் சூத்திர வகுப்பினரை கையையும், காலையும கட்டிப்போட்டு கீழே அமுக்கி வைத்திருந்தனர். முதலாவதாக சூத்திரர்கட்கு சொத்துச் சேர்க்கவோ அறிவும் கல்வியும் பெறவோ ஒரு வாய்ப்பும் தரப்படவில்லை. இந்த அசௌகரியத்துடன் இன்னொன்றும் சேர்ந்து கொண்டது. சூத்திர வகுப்பில் எப்போதாவது அசாதாரணமான அறிவும் திறமையும் கொண்டவன் ஒருவன் இருந்தால் செல்வாக்குள்ள மேல்வகுப்பினர் அவன்மீது பட்டங்களையும், கௌரவத்தையும் சொரிந்து அவனைத் தம் வட்டத்துக்குத் தூக்கிக்கொண்டார்கள். அவனுடைய செல்வமும், ஞானத்தின் சக்தியும் பலமும் வேறு சாதிக்காரர்களின் நன்மைக்காகப் பயன்படுத்தப்பட்டது. அவனுடைய தகுதிச் சிறப்பின் லாபம் எதுவும் அவனுடைய சொந்தச் சாதிக்காரர்கட்குக் கிட்டவே இல்லை. அதுமட்டும் அல்ல எதற்கும் பயனற்றவர்கள், மேல்சாதியினரில் பயனற்ற குப்பைகள் சூத்திர சாதிக்குத் தள்ளிவிடப்பட்டு சூத்திரர்களின் எண்ணிக்கை உயர்ந்தது.

— சுவாமி விவேகானந்தர்
(தொகுதி IV பக்கம் 468-470)

## காட்சிமேடை - 36

### இராமநாதபுரம்

சுவாமிஜி அலையும் துறவியாக வாழ்ந்த வாழ்க்கை வரலாற்றைத் தொடர்வோம். குமரிமுனையிலிருந்து அவர் அதிகம் நடந்து சென்னை சென்றார். வழியில் ராமநாதபுரத்திலும் பாண்டிச்சேரியிலும் தங்கினார்.

சுவாமி விவேகானந்தர் விஷயங்களை முழுமையாகக் கண்டுவிட்டார். அதனால் அவர் பிரச்சாரகத் தொண்டர்பணிக

குத் தன்னைத் தயாரித்துக் கொண்டார். அவர் சமயம் சார்ந்த ஒரு மனிதர். மதவாதி. அலைந்து திரியும் வாழ்க்கையில் பெற்ற அனுபவத்தினாலும், பயிற்சியினாலும் ஆன்மீகத்துறையில் ஆழ்ந்த கூர்ந்த பார்வை பெற்றிருந்தார். தற்போது நடைமுறையில் பயன்படுவதற்கு இந்த கூர்ந்த பார்வையையும் சத்தியத்தையும் தகுதி உள்ளவைதான் என்று நிரூபித்தாக வேண்டும். விரைந்து மாறிவரும், விரிவடைந்து வரும் உலகில் அவற்றை அவர் பரீட்சை செய்து பார்க்க வேண்டும். அவர் மேலேபோக வழிதேடவேண்டும்.

சமுதாயத்தில் இருக்கும் குறைகட்கு சமயம் தவறானதாக இருந்ததுதான் காரணம் என்பதை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை. பாரதத்தில் அழிவுக்கும் அடிமைத்தனத்துக்கும் இடையில் உயிர்ச் சக்தியைத் தூண்டிவிட்டுக் கொண்டிருந்தது சமயம்தான். சமயத்தின் பணிவேகமும், தீவிரத்தன்மை கொண்ட தெம்பும் இப்போது ஒரு புதிய சந்தர்ப்பத்தில் பணிபுரிந்தாக வேண்டும். தளைகள், மனத்தடைகள், சங்கோஜங்கள் இவற்றிலிருந்து சமயம் விடுபட்டு ஆகவேண்டும்.

துவாரகையில் அவர் கண்ட ஒளி இப்போது சுடர்விட்டுப் பிரகாசிக்க வேண்டும்.

ஆனால், வழியில் இருக்கும் தடைகள் நிஜமானவை; வெறும் கற்பனை அல்ல. சுவாமி விவேகானந்தருக்குத் தன் பணிகள் என்னென்ன என்றும் அவற்றை எவ்வாறு செய்வது என்றும் தெரிந்திருந்தது. ஆனால், அவர் கன்னியாகுமரியிலிருந்து சென்னை செல்லும் வழியில் பல தடங்கல்களைச் சந்திக்க வேண்டியிருந்தது

அவர் பெரும்பாலும் நடந்தே சென்றார். பிச்சை எடுத்து உணவு உண்டார். மக்களின் தப்பபிப்ராயங்களும் மதவெறியும் அவருக்கு விஷயங்களை இன்னும் கடினமாக்கின.

### பாண்டிச்சேரி:

அவர் இராமநாதபுரம் வழியாகப் பாண்டிச்சேரி வந்தடைந்தார். இங்கே அவர் ஒரு பண்டிதரைச் சந்தித்தார். பண்டிதர் அதிகம் கற்றறிந்தவரல்ல. ஆனால், அவரிடத்தில் அகம்பாவத்துக்கு ஒன்றும் குறைச்சல் இல்லை. சுவாமிஜியின் கருத்துக்கள் ஒவ்வொன்றுக்கும் அவர் மறுப்புத் தெரிவித்தார். கடல் பயணமா ... கூடாது. ஒருபோதும் கூடாது. வெளிநாடுகளில் வசித்து வந்த மிலேச்சர்கள் தொடர்பினால் நீங்கள் நம்

நாட்டவர் வாழ்க்கையில் தீட்டுப்படச் செய்துவிடுவீர்கள். சூத்திரர்களைத் தாழ்ந்த நிலையிலிருந்து உயர்த்துவதா? ஒரு போதும் இல்லை ... வேண்டவே வேண்டாம்: இல்லவே இல்லை. கடைசியில் சுவாமிஜி சலிப்படைந்து போனார். கூக்குரலிட்டார். "நண்பரே நீங்கள் என்னதான் சொல்கின்றீர்கள். தர்மம் என்ன சொல்கின்றது என்பதைப் பரீட்சை செய்து பார்க்கும் பொறுப்பு ஒவ்வொரு கல்வி கற்ற இந்தியனுக்கும் உண்டு. இதற்கு நாம் இறந்த காலத்தின் பழகிப்போன ஒரு எல்லைக்குட்பட்ட தடங்களைவிட்டு வெளிவந்து தற்காலத்தில் உலகம் எப்படி முன்னேறி வருகின்றது என்று பார்க்க வேண்டும். மூடநம்பிக்கைகள் நம் சமுதாய வாழ்க்கையின் முன்னேற்ற வேகத்துக்கு முட்டுக்கட்டை போட்டாலும் நம் தத்துவச் சிந்தனைகட்கு குலைவு ஏற்படுத்தினாலும் நாம் முன்னே அடி எடுத்து வைத்து அவற்றைத் தடுக்கவேண்டும்."

சுவாமிஜி கூறினார்: "சூத்திரர்கள் எழுந்து தம் உரிமைகளையும், சலுகைகளையும் கோரிப் பெறவேண்டும்; புரோகிதர்களின் கொடுங்கோன்மையை ஒழித்துக்கட்டி தேசம் சிதறுண்டு போகும் தீமையை விலக்க வேண்டும்."

சில பிரிவினரிடமிருந்து சுவாமிஜிக்கு எதிர்ப்பு வந்தது உண்மைதான். கடவுளின் கரங்களும் அவருக்கு உதவிடவே முன் வந்தன.

## சென்னை:

சுவாமி விவேகானந்தர் டிசம்பர் 1892-ல் சென்னை வந்து சேர்ந்தார். ஒன்றரை மாதம் மன்மதபாபுவின் இல்லத்தில் தங்கினார். அங்கிருந்து 1893 பிப்ரவரி 10 முதல் 17 தேதிகளில் ஹைதராபாத் சென்று வரும் சுருக்கமான பயணத்தை மேற்கொண்டார்.

சுவாமி விவேகானந்தரை தீர்க்கதரிசி என்றும், குருநாதர் என்றும் முதலில் சென்னைதான் அடையாளம் கண்டு கொண்டது. தென் பாரதத்தின் முதன்மை நகரமான சென்னை வரை அவரது புகழ் ஏற்கெனவே பரவி இருந்தது. உற்சாகமிகு இளைஞர் குழு ஒன்று சுவாமிஜியை வரவேற்றது. ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள் அங்கு உடனேயே தாமதமின்றி ஏற்றுக்கொள்ளப்பட்டன. சுவாமிஜியின் தென்பாரதச் சீடர்கள் தான் அவருடைய சொற்பொழிவுகளைப் பிரசுரம் செய்தனர். சுவாமிஜி அமெரிக்காவில் பெரும் சாதனைகள் புரிந்ததைப் பரவலாகப் பிரச்சாரம் செய்ததும் அவர்கள்தான். இதெல்லாம் சுவாமிஜி பாரதம் திரும்புவதற்கு முன்னமே நடந்த சம்பவங்கள் ஆகும்.

சென்னையில் சுவாமிஜி அமெரிக்கா செல்லும் தம் நோக்கத்தை வெளிப்படையாகக் கூறினார். அவருடைய பக்தர்கள் அவருடைய பயணத்துக்காகப் பிற்பாடு நிதி திரட்டினார்கள். சுவாமிஜி தேசம் திரும்பியதும் பாரதத்தில் பரந்த

அளவில் பணியைத் துவக்கவும் திட்டமிட்ட முறையில் பணி ஆற்றவும் இவ்விளைஞர்களையே பயன்படுத்திக் கொண்டார். சென்னையில் சுவாமிஜி தன் விவாதங்களில் சமயம், தத்துவம், விஞ்ஞானம், இலக்கியம், வரலாறு ஆகிய துறைகள் பற்றித் தன் ஆன்மாவே வெளிப்படும்படிப் பேசினார். நேரம் கிடைக்காததாலோ, உற்சாகம் இன்மையினாலோ தியானம் செய்யாமலிருப்பவர்கள் மீது சுவாமிஜி கடுங்கோபம் கொள்வார். "என்ன சொல்லுகின்றீர்கள் நீங்கள்? அந்தப் பழங்கால மாமனிதர்கள், பழைய யுக ரிஷிகள் சாதாரண மனிதர்கள் அல்லரே. மகாத்மாக்கள் ஆயிற்றே. அவர்கள் முன்னால் நிற்கவே நீங்கள் ஒரு பூச்சியைப்போல் கூசுவீர்களே! அவர்கட்கு தியானம் புரியவும், பக்தி செய்யவும் நேரம் இருந்தது. உங்களுக்கு இல்லையா?"

கிண்டல் செய்த ஒருவரிடம் சுவாமிஜி கூறினார். "இந்த மாதிரி மரியாதைக்குகந்த உங்கள் முன்னோர்களைக் குறைகூற உங்களுக்கு என்ன தைரியம்? அரைகுறைக் கல்வி உங்கள் மூளையையே குழப்பி விட்டதே! ரிஷிகளின் ஞானத்தை நீங்கள் ருசிபார்த்ததாவது உண்டா? வேதங்களைத தொட்டாவது பார்த்ததுண்டா? ரிஷிகள் உங்களுக்குச் சவால் விடுகிறார்கள். தைரியமிருந்தால் அவர்களை எதிர்த்து அந்தச் சவாலை ஏற்றுப் பாருங்கள்!"

கே. வியாஸராவ் தன் அபிப்ராயங்களை இவ்வாறு வெளியிடுகின்றார் "அவர் கல்கத்தா பல்கலைக்கழகப் பட்டதாரி. அவர் தலை மொட்டை. கம்பீரமான கண்ணைக் கவரும் தோற்றம்! துறவி உடை அணிந்தவர். ஆங்கிலத்திலும், சம்ஸ்கிருதத்திலும் சரளமாகப் பேசவல்லவர். சுடச்சுடப் பதில் சொல்வதில் அசாதாரணமான திறமை அவருக்குண்டு. கூச்சமில்லா முழுக்குரலில் அவர் அனாயாசமாகப் பாடியதைக் கேட்டால் ஏதோ இப்பிரபஞ்சத்தின் சக்தியுடன் சேர்ந்து சுருதி கூட்டிக் கொண்டதுமாதிரி இருக்கும்! அவர் இம்மண்ணுலகில் அலைந்து திரிபவர். திடமான மனிதர். வாட்டசாட்டமாக இருப்பார். பேச்சில் திறமை சுடர்விடும் கூர்ந்த மதி! அற்புதங்கள், மாயாஜாலம் புரிபவர்களை வெறுத்து ஒதுக்குபவர். நல்ல உணவு என்றால் அவருக்குப் பிடிக்கும். ஹுக்கா பிடிப்பார்; புகைக்குழாய் பிடிப்பார். இருப்பினும் அவர் துறவை வற்புறுத்தித் திரும்பத் திரும்பப் பேசுவார். அப்பேச்சில் அவரது திறமை போற்றத்தகுந்ததாகும். அவர் மனப்பூர்வமாக பேசுவது மரியாதை உணர்வைத் தூண்டும். இத்தகைய ஒரு மகத்தான மனிதரைக் கண்டு அந்த ஊர் பட்டதாரிகளும், முதுகலைப் பட்டதாரிகளும் திணறிச் செய்வதறியாது திகைத்தனர். அம்மனிதரையும் கண்டனர். விவாதத்துக்கான சமயம் முடிந்து சூழ்நிலை இலேசாகிவிட்டால் அவர் வேடிக்கைகளிலும், குறும்புகளிலும் ஈடுபடுவதையும் கண்டார்கள் [illegible] செய்வதில் பின்வாங்காதவர். திடுக்கிடச் செய்யும்படி [illegible]லாகப் பேசுபவர் இவை எல்லாம் இருக்க அவருடைய தேசபக்தியின் தூய்மையும், உத்வேகமும்தான் அவரை அனைவருக்கும் பிரியமானவராக ஆக்கின.

அந்த இளைஞர் உலகத் தொடர்புகள் அனைத்தையும் விட்டவர். தளைகளிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டவர். அவர் ஒன்றே ஒன்றைத்தான் நேசித்தார்-தன் தாய்நாட்டை''.

## காட்சிமேடை - 37

### ஹைதராபாத்

சுவாமி விவேகானந்தர் சென்னையில் தங்கி இருந்தபோது அவருக்கு ஹைதராபாத் வரும்படி ஒரு அழைப்பு வந்தது. அவர் ஹைதராபாத் வந்தபோது அவருக்குப் பெரும் திரளாகக் குழுமிய மக்கள் அன்பான வரவேற்பு அளித்தனர். புகைவண்டி நிலையத்தில் நகரப் பிரமுகர்கள் உட்படப் பலர் வந்திருந்தனர்.

மகபூப் கல்லூரியில் தான் சுவாமிஜி முதன் முதல் பொது மேடையில் பேசியது. 1893 பிப்ரவரி 18 பிற்பகலில் பெருந்திரளான மக்களிடையே ''மேற்கு நோக்கி என் லட்சியப்பயணம்'' என்பதைப் பற்றி அவர் பேசியபோது மக்கள் பெரும் ஆர்வத்துடன் அதனைக் கேட்டார்கள். சொற்பொழிவாளர் என்ற முறையில் அவரது முதல் அனுபவம் இது. கேட்டவர்கள் அவருடைய பேச்சின் பெரும் சக்தியை உணர்ந்தார்கள்.

அன்று அதற்கு முன்னால் சுவாமிஜிக்கு நிஜாம் அரண்மனைக்கு வரும்படி அழைப்பு வந்தது. அவர் இரண்டு மணி நேரம் நவாப் பஹாதூர் ஸர் குர்ஷீத்ஜாவுடன் உரையாடினார். அந்தச் சந்திப்பின்போது மனிதன் சத்தியத்தைத் தரிசனம் செய்தல், மனிதப் பிரக்ஞை உணர்வின் ஆழம் இவற்றிலிருந்து மேலே கிளம்பும் சமயக்கருத்துக்கள், அவற்றின் முழுமையான பின்னணி பற்றி சுவாமிஜி தன்கருத்துக்களை முன்வைத்தார். பேச்சின் மையக்கருத்து வேதாந்தம்தான்.

சந்திப்பின் முடிவில் நவாப் கூறினார்: ''சுவாமிஜி தாங்கள் வெளிநாடு சென்று வேதாந்தமாகிய அனைத்தையும் உள்ளடக்கிய (சார்வ பௌமமான) தேவச்செய்தியைப் பிரச்சாரம செய்வதற்குக் கொண்ட முயற்சிக்கு நான் உதவத் தயார். இதற்கென நான் ஆயிரம் ரூபாய் தருகிறேன்'' என்றார். அந்த உதவியை மறுத்து, தேவைப்படும்போது பணஉதவியைப் பெற்றுக்கொள்வதாக சுவாமிஜி கூறினார்.

### அளசிங்கப் பெருமாளுக்கு ஒரு கடிதம்

மே/பா பாபு மதுசூதன சட்டோபாத்தியாயா
மேற்பார்வைப் பொறியாளர்
கர்த்தாபாத், ஹைதராபாத் 11-2-1893

அன்புள்ள அளசிங்கா,

உன் நண்பனான இளம் பட்டதாரியும் வங்காளி கனவான் ஒருவரும் என்னை ரயில் நிலையத்தில வரவேற்க வந்திருந்தனர். தற்போதைக்கு நான் அந்த வங்காளி கனவானுடன் தங்கி இருக்கிறேன். நாளைக்கு உன் இளம் நண்பன் வீட்டுக்குப் போய்

அங்கு சிலநாட்கள் தங்கி இருப்பேன். பிறகு இங்கு பார்க்க வேண்டிய காட்சிகளைப் பார்த்து விடுவேன். இன்னும் சில நாட்களில் என்னை நீ சென்னையில் எதிர்பார்க்கலாம். தற்போது நான் ராஜபுதனம் செல்ல இயலாது. இதனை நான் வருத்தத்துடன் கூறிக்கொள்கின்றேன். இங்கே இதற்குள்ளேயே பயங்கரமான சூடாக இருக்கின்றது. ராஜபுதனத்தில் எவ்வளவு சூடாக இருக்குமோ! என்னால் சூட்டைத் தாங்கிக் கொள்ளவே முடியாது. ஆகவே, அடுத்ததாக பங்களூர் திரும்பப்போய் ஊட்டியில் கோடையைக் கழிக்கப் போகின்றேன். கோடையில் என் மூளையே உருகிவிடும்போல் இருக்கின்றது.

ஆகவே, என் திட்டங்கள் எல்லாம் விழுந்து நொறுங்கிப் போய் விட்டன. நான் சென்னையிலிருந்து கிளம்பிப் போவதற்கு அவசரப்பட்டது இதனால்தான். அப்போது எனக்குச் சிலமாதங்கள் நேரம் கிடைத்திருக்கும். வடநாட்டு மன்னர்கள் யாரையாவது பிடித்து என்னை அமெரிக்கா அனுப்பும்படி செய்திருப்பேன். அடடா, இப்போது அதிகக் காலம் தாமதமாகிவிட்டது. முதலாவதாக இந்தச் சூட்டில் என்னால் சுற்றித்திரிய முடியாது. நான் இறந்தே போய்விடுவேன். இரண்டாவதாக என் ராஜபுதனத்து நண்பர்கள் என்னைக் கட்டிப்போட்டு அவர்களருகே வைத்து ஐரோப்பா செல்லவிடாமல் தடுத்து விடுவார்கள். ஆகவே, என் நண்பர்களுக்குத் தெரியாமல் புதிதாக யாரையாவது பிடிக்க வேண்டும் என்பது என் திட்டம். ஆனால் சென்னையில் நிகழ்ந்த காலதாமதம் என் நம்பிக்கைகளைச் சிதற அடித்து விட்டது. பெருமூச்சுடன் நான் முயற்சியைக் கைவிட்டு இறைவன் சித்தப்படி ஆகட்டும் என்று விட்டுவிட்டேன். இருப்பினும் ஒன்றுமட்டும் நிச்சயம். விரைவில் சென்னை வந்து ஓரிரு நாட்கள் அங்கே உன்னுடன் இருந்துவிட்டுப் பிறகு பெங்களூர் அங்கிருந்து ஊட்டி போகவுள்ளேன். எம், மகாராஜா என்னை அனுப்பி வைக்கிறாரா பார்க்கிறேன். வைக்கிறாரா என்றுநான் இழுப்பது ஏன் என்றால் தட்சிண(தென்னாட்டு)மன்னர் ஒருவரின் உத்தரவாதத்தை (வாக்குறுதி) பற்றி நான் உறுதியாக இருக்க முடியாது. அவர்கள். ராஜபுத்திரர்கள் அல்லவே. ஒரு ராஜபுத்திரர் செத்தாலும் சாவாரே ஒழிய கொடுத்தவாக்கை மீறமாட்டார். இருப்பினும் மனிதன் வாழ வாழ, புதிது புதிதாகக் கற்றுக் கொள்கின்றான். அனுபவம் தான் உலகின் மிகப்பெரிய ஆசிரியர்.

சொர்க்கலோகத்தைப் போலவே மண்ணுலகிலும் இறைவனின் சித்தமே செயலாகும்; தங்களுடையதே மகிமை, ராஜ்யமும் என்றென்றைக்கும் தங்களுடையதே!

உங்கள் அனைவருக்கும் என் நல்வாழ்த்துக்கள்.

உன் சச்சிதானந்தர்

(சுவாமிஜியின் வேறுபெயர் அந்த நாட்களில்)



# காட்சி மேடை - 38

**சென்னை:**

ஹைதராபாதில் சுவாமி விவேகானந்தர் ஆற்றிய பொதுச் சொற்பொழிவுச் செய்தி சென்னை வந்தடைந்தது. சுவாமிஜி யின் பக்தர்களும், சீடர்களும் மிகுந்த உற்சாகத்துடன் இருந் தனர். தன் லட்சியப் பணியை நிறைவேற்றுவதற்காக சுவாமிஜி வெளிநாடு செல்வதற்குப் பயணத்திற்கான நிதி திரட்டவும் ஏற்பாடுகள் செய்யவும் சுவாமிஜியின் அனுமதியைக் கோரினார் கள். விவேகானந்தர் தன் திட்டத்திற்குத் தன் குருநாதரின் அனுமதிக்கான குறிப்பு ஏதாவது கிடைக்கின்றதா என்று பார்த் துக் கொண்டிருந்தார். சீடர்களின் ஆர்வத்தைக் கண்ணுற்ற சுவாமிஜி சிந்தித்தார் ''அவர்களுடைய தயார் நிலையே முதல் சுபசகுனமோ''. தன் ஆதரவாளர்களிடம் அவர் கூறினார்; ''பராசக்தியின் விருப்பம் நான் (வெளிநாடு) செல்லவேண்டும் என்பதானால் பொதுமக்களிடமிருந்தே நமக்குப் பணம் கிடைக்க வேண்டும். ஏனெனில் பாரதநாட்டுப் பொதுமக்களுக்காகத்தான் நான் மேலை நாடுகட்குப் போகிறேன். பொதுமக்களுக்காகவும், ஏழைகட்காகவும்''.

இதற்கு முன்னால் அவர் தன் சீடர்கள் சேகரித்த நிதியை யும், பணக்காரத் தனிநபர்கள் பணம் தர முன்வந்ததையும் ஏற்க மறுத்துவிட்டார். அதை ஏழைகளிடையே பகிர்ந்து கொடுத்து விடும்படி கூறிவிட்டார். அவருக்கு ஐயங்கள் இருந்தன. அவர் அமெரிக்கா செல்லவேண்டும் என்று இறைவன் விரும்புகின்றானா என்று அவர் எப்படித் தெரிந்து கொள்வது? தன் பேராசையி னால் உந்தப்பட்டுத்தான் இந்த முடிவினை எடுத்திருந்தால்...? தெய்வம் தனக்கு வழி காட்டவேண்டும் என்று அவர் தீவிரப் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார்.

மெல்ல மெல்ல அவருடைய ஐயங்கள் மறைந்தன. தன் மகத்தான லட்சியப் பணி வெற்றி பெறுவதற்காக தெய்வக்கரம் முனைந்து ஏற்பாடுகள் செய்வது அவருக்குத் தெளிவாகத் தெரிந்தது.

சுவாமிஜியின் தர்மசங்கடத்தை விலக்கும் அடையாளமாக கனவு ஒன்றினை ஓரிரவில் அவர் கண்டார். ஸ்ரீராமகிருஷ்ணர்

கடற்கரையில் நடந்து செல்வதை சுவாமிஜி கண்டார். பிறகு குருநாதர் கடலில் நுழைந்தார். தொடர்ந்து வரும்படி சுவாமிஜிக்குச் சைகை காட்டினார். ஆணையிடும் குரலில் ''செல்'' என்ற சொல்லையும் கேட்டார். சாரதாதேவிக்கு சுவாமிஜி எழுதின கடிதத்துக்குப் பதிலாக அவருடைய லட்சியப் பணி நிறைவேறத் தம் ஆசீர்வாதங்களைத் தூய அன்னையார் அனுப்பி வைத்தார். அவரும் சுவாமிஜி கண்ட திவ்வியக் காட்சியைக் கண்டாராம். சுவாமிஜி அமெரிக்கப் பயணத்தை மேற்கொள்ள வேண்டுமென்பது ஸ்ரீராமகிருஷ்ணரின் விருப்பம் என்று தூய அன்னையார் அறிந்து கொண்டார்.

இப்போது இறுதியில் தனக்குக் கிடைத்த அழைப்பு பற்றி சுவாமிஜி ஐயமற உணர்ந்தார். பயணத்துக்கான ஏற்பாடுகளை சீடர்கள் நிறைவேற்றினர். இந்தத் தருணத்தில் சுவாமிஜியின் சீடரான கேத்ரி மன்னரின் தனிச் செயலாளர் சென்னை வந்து சேர்ந்தார். ராஜாவுக்கு ஒரு புத்திரன் பிறந்திருக்கும் ஆனந்தச் செய்தியையும் அவர் கொண்டு வந்தார். பிற்கால மன்னரை ஆசீர்வதிக்க வரவேண்டும் என்று சுவாமிஜியை வேண்டிக் கொண்டார். சுவாமிஜி சம்மதித்தார். மன்னருக்கு அவரைக் கண்டு மகிழ்ச்சி அதிகமாயிற்று. தான் விரைந்து அமெரிக்கா செல்ல இருப்பதாகக் கூறினார்; அஜித்சிங் சுவாமிஜியுடன் ஜெய்ப்பூர் வரை வந்தார். அங்கிருந்து சுவாமிஜி பம்பாய் சென்று வெளிநாட்டுப் பயணத்துக்காகக் கப்பல் ஏறவேண்டி இருந்தது. தனிச் செயலாளர் முன்ஷி ஜக்மோகன்லால் விவேகானந்தருடன் பம்பாய் வரை செல்வதென்று ஏற்பாடாயிற்று.

## காட்சி மேடை - 39

### ஜெய்ப்பூர்

ஜெய்ப்பூரில் நடந்த ஒரு சம்பவத்தை சுவாமி விவேகானந்தர் தன் வாழ்நாள் முழுவதும் நினைவு கொண்டிருந்தார். கேத்ரி மன்னர் விழாக் கொண்டாடும் உற்சாகத்தில் இருந்தார். கேத்ரி கோட்டி எனும் அரண்மனையில் ஒரு நடன மாதுவின் இசை நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்து அதில் வந்து இருக்கும்படி சுவாமிஜியை மன்னர் கேட்டிருந்தார். சுவாமிஜி வர மறுத்து விட்டார். அவர் ஒரு துறவி என்பதால் அவர் இத்தகைய கேளிக்கைகளில் கலந்து கொள்ளக் கூடாது அவர் விலகி இருந்தார். நடனமாது பெரிதும் வருத்தம் அடைந்தாள். மிக வருத்தம் தோய்ந்த குரலில் வைஷ்ணவ பக்தர் சூர்தாஸரின் பாடல் ஒன்றைப் பாடினார். பாடலின் சொற்கள் சுவாமிஜியின் காதுகளை எட்டின.

பிரபு என் பாவங்களைக் கண்டு கொள்ளாதீர்கள்
தங்கள் திருநாமம் சமதர்சீ என்பதல்லவா?
ஓரிரும்புத்துண்டு கோயிலில் பயன்படுகின்றது.
இன்னொன்றோ கசாப்புக் கடைக்காரனின் கைக்கத்தியாக இருக்கிறது
பரிசவேதியால் தொடப்பட்டால்
இரண்டுமே தங்கமாகி விடுகின்றன.
யமுனையின் புனித நீரும், சாக்கடையின் அழுக்குத் தண்ணீரும்
கங்கையின் நீரோட்டத்தில் சென்று சேர்ந்தால்
இரண்டுமே புனிதம் ஆகிவிடுகின்றன
ஆகவே பிரபு என் பாவங்களைக் கண்ணெடுத்துப் பார்க்காதீர்கள்
சமதர்சீ என்பதல்லவா தங்கள் திருநாமம்.

சமதர்சீ - அனைத்தையும் சமமாகக் காண்பவர்
பரிசவேதி - இரும்பைப் பொன்னாக்கவல்ல கல்.

இப்பாடல் சுவாமிஜியின் மனத்தைத் தீவிரமாகப்பாதித்து விட்டது. சமுதாயம் அந்தப் பெண்ணை மாசடைந்தவள் என்று கண்டித்தது. அவளோ சுவாமிஜிக்கு ஒரு மகத்தான உபதேசம் செய்துவிட்டாள். எப்போதும் தூய, எப்போதும் சுதந்திரமான, எப்போதும் ஒளிபெற்று விளங்கும் பிரம்மம் எல்லா உயிர்கட்கும் கருப்பொருளாவார். பரம்பொருளுக்கு முன்னால் நல்லது, கெட்டது, தூயது, தூய்மையற்றது என்ற வேறுபாடுகள் கிடையாது. பிரம்மத்தின் ஒளி மறைக்கப்படும்போதுதான் இத்தகைய இரட்டைகள் (துவந்துவங்கள்) தோன்ற ஆரம்பிக்கின்றன. கடவுளின் கண்களில் பாவம் என்பதே இல்லை. ஆகவே, மனிதன் எதனையும் கண்டனம் செய்யக்கூடாது. பாவத்தில் ஊறியவள், தூய்மையற்றவள் என்று கூறப்படும் பெண்ணையும் குறை கூறக்கூடாது. சுவாமிஜி இசைமண்டபத்துக்கு வந்து மன்னிப்புக் கோரினார். பாடிய பெண் மகிழ்ச்சி அடைந்து பாடலைத் திரும்பவும் பாடி முடித்தார். துறவி கச்சேரி முடியும் வரை இருந்து ரசித்தார்.

## காட்சிமேடை - 40

### அபூசாலை; புகைவண்டி நிலையம்

பம்பாய் போகும் வழியில் சுவாமி விவேகானந்தர் அபூசாலை புகைவண்டி நிலையத்தில் தங்கினார். இங்கே சுவாமிகள் பிரம்மானந்தரும், துரியானந்தரும் சுவாமி

விவேகானந்தரைச் சந்தித்தனர். சுவாமி விவேகானந்தர் அவர் களிடம் வரவிருக்கும் தன் அமெரிக்கப் பயணம் பற்றிக் குறிப் பிட்டார். தான் வெளிநாடு செல்வதின் காரணத்தையும் குறிப் பிட்டார். பாரதம் படும் துயரம்தான் அந்தக் காரணம், ''நான் பாரதம் முழுவதும் பயணம் செய்து வந்தேன். ஐயகோ! பாமர மக்களின் பயங்கரமான வறுமை என் கண்ணால் பார்த்தேன். சகோதரர்களே, அது எனக்குப் பெரும் துன்பத்தைக் கொடுத்தது. என் கண்ணில் நீர் வழிந்ததை என்னால் தடுத்து நிறுத்த முடியவில்லை. இப்போது என் உறுதியான தீர்மானம் என்ன வென்றால் அவர்களுடைய வறுமையை விலக்க முயலாமல் அவர்களிடத்தில் சமயப் பிரச்சாரம் செய்வது வீண்வேலை. இக்காரணத்தினால்தான் நான் அமெரிக்கா செல்ல விருக்கின் றேன். பாரதத்தின் ஏழைமக்களுக்குக் கதிமோட்சம் கிட்டும் வழியைத் தேடுவதற்காக.

சுவாமி துரியானந்தரைப் பார்த்து சுவாமிஜி கூறினார். ''சகோதரா! உன்னுடைய 'சமயம்' என்றழைக்கப்படுகின்ற விஷயம் எனக்குப் புரியவே இல்லை.'' தன் கையைத் தன் இதயத்தின்மீது வைத்துக்கொண்டு உணர்ச்சிவசப்பட்டு அவர் கூறினார். ''என் இதயம் பெரிதாகி விசாலமாகி விட்டது. நான் உணரக் கற்றுக்கொண்டு விட்டேன். நான் மிகவும் வருத்த முறுகின்றேன். என்னை நம்பு'' என்றார். உணர்ச்சிகள் மேலெழ உணர்ச்சி தொண்டையை அடைக்க அவர் ஒன்றும் பேசாதிருந் தார். அவர் கன்னத்தில் கண்ணீர் வழிந்தோடியது.

அபூசாலை புகைவண்டி நிலையத்தில் நடந்த இன்னொரு சம்பவம் தேவைப்பட்டால் சுவாமிஜி எவ்வளவு கண்டிப்பாக இருப்பார் என்பதைக் காட்டுகின்றது. அவர் ஒரு மேல்வகுப்புப் பெட்டியில் அமர்ந்திருந்தார். ஒரு வங்காளி கனவான் சுவாமிஜியை வழியனுப்ப வந்திருந்தார். ஒரு ஆங்கிலோ இந்திய பயணச்சீட்டுப் பரிசோதகர் உள்ளே நுழைந்து அந்தக் கனவானை உடனே ரயில் பெட்டியைவிட்டு வெளியேறும்படி முரட்டுத் தனமாக உத்தரவிட்டார் சுவாமிஜி அவரிடம் ''சரியாக நடந்து கொள்ளுங்கள், பணிவுடன் இருங்கள்'' பரிசோதகர் பதில் சொல்லத் தொடங்கி தனக்கு ஹிந்தி அதிகம் தெரியாதென்று கூறினார். ''இந்த மனிதர்'' என்று பேச ஆரம்பித்தார். சுவாமிஜி இடைமறித்து ''உங்களுக்கு ஹிந்தி தெரியாதென் கிறீர்கள்? உங்களுக்கு ஆங்கிலமும் தெரியாதென்று எனக்குத் தோன்றுகின்றது. 'இந்த மனிதன்' என்று கூறாதீர்கள். 'இந்த கனவான்' என்று கூறுங்கள்'' என்றார்.

# காட்சி மேடை - 41

## பம்பாய்

சுவாமி விவேகானந்தர் முன்ஷி ஜக்மோஹன்லால் உடன் வர பம்பாய் வந்தடைந்தார். முன்ஷி கேத்ரி மன்னரின் தனிச் செயலாளர் ஆவார். மன்னர் சுவாமிஜிக்காக காவிப்பட்டு அங்கி, காவி நிற தலைப்பாகை,அழகான தலப்பாகை,அழகான பணப்பை ஒன்று, பி ஓ கம்பெனிக்கு உரிமையான 'எஸ்,எஸ்,பெனின்சுலார்' என்ற கப்பலில் ஒரு முதல்வகுப்புப் பயணச்சீட்டு இவற்றைக் கொடுத்தனுப்பியிருந்தார். கப்பலில் 31-5-1893 அன்று தன் பய ணத்தை சுவாமி விவேகானந்தர் தொடங்கினார். கேத்ரி ராஜா எந்தப் பெயரால் சுவாமிஜி உலகப்புகழ் பெற்றாரோ அந்த 'விவேகானந்தர்' என்ற பெயரையும் அவருக்குச் சூட்டினார். அப்பெயரால்தான் சுவாமிஜி இந்தியாவின் புகழை உலகின் கண் களின்முன் உயர்த்திக் காட்டினார்.

கப்பல் துறைமுகத்தை விட்டுக் கிளம்பிற்று. சுவாமிஜி கப்பலின் தளத்தில் நின்று தடுப்புக்கம்பிமீது சாய்ந்துகொண்டு தன் அன்புத்தாய்நாட்டின் கரை கண்ணிலிருந்து மறைவதைக் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டே இருந்தார்.

தன் பாரதப் பயணத்தினூடே சுவாமி விவேகானந்தர் புத்தமதம், சமணமதம் இவற்றின் சாரத்தை உணர்ந்திருந்தார். ராமானந்தர், தயானந்தர் இவர்கள் கூறியதன் உட்பொருளை அறிந்திருந்தார். துளசிதாஸர், நிஸ்சலதாஸ் ஆகியோரின் தீவிர மாணவராகி இருந்தார். மகாராஷ்டிர தெய்வ பக்தர்கள், தென் பாரத ஆள்வார்கள், நாயன்மார்கள் இவர்களைப் பற்றி அறிந் திருந்தார். பரமஹம்ஸ பரிவ்ராஜக ஆச்சாரியாரிலிருந்து லால் குருவின் சீடனான ஏழைத்தோட்டி வரை அவர்கள் நம்பிக்கை கள், லட்சியங்கள், நினைவுகள் இவற்றை அறிந்திருந்தார். அவ ருடைய இதயமும், ஆன்மாவும் தேசத்தின் உணர்ச்சிமிகு பெருங் கதைகளாயின. தாய்நாட்டின் திருநாமத்தை உச்சரித்தாலே அவருள்ளத்தில் பக்திப்பரவசப் பேருணர்வு பொங்கி வழிந்தது. உலகிலுள்ள அடிப்படையான, ஜீவனுள்ள மிகமுக்கியமான

விஷயங்கள் அனைத்தும் அவருடைய கையில் கிட்டின. உயிர்ச் சக்தியின் ரகசிய ஊற்றுக்கண்கள் அனைத்தையும் அவர் அறிந்திருந்தார். அடிப்படை உண்மைகளை அவர் நன்கு புரிந்து கொண்டதாலும் ஆன்மீக ஒளியினை அவர் பெற்றதாலும் அவருடைய உள்ளத்தில் தி கனன்று எழுந்தது. மற்றவர்கள் உண்மைகளைத் துண்டு துண்டாகப் பார்த்தார்கள். அவருடைய மாமனமோ அவற்றிடையே உள்ள தொடர்புகளைப் புரிந்து கொண்டது. அவருடைய மனம் விஷயங்களின் மையப்பகுதியைத் துளைத்துச் சென்று உண்மைகளை அவற்றின் உண்மையான ஒழுங்கு வரிசையில் அடுக்கிக் காட்டிற்று. அவர் மனம் படைப்பு முழுவதையும் உள்ளடக்கியது. அவர் பண்பாடு பூரணமாக நடைமுறைக்குட்பட்டது. சமய மகாநாட்டில் இந்தியாவை முழுமையாக எடுத்துச்செல்ல அவரே தேவையான மிகச்சிறந்த கருவிகளைக் கையில் வைத்திருந்தார். வேத, வேதாந்த, புத்தமத, சமணமத, சைவ, வைணவ, இஸ்லாம் அறிவு எனும் தலைசிறந்த கருவிகள் அவரிடம் இருந்தன. குருநாதர் ஸ்ரீராமகிருஷ்ணரே உண்மைப் பொருளில் ஒரு ''சமயமகாநாடு'' (சமயங்களின் சங்கமம்) அல்லவா? அவருடைய மாணவரைவிட (சிக்காகோ) சமய மாநாட்டுக்குப் பாரதப் பிரதிநிதியாகச் செல்லத் தகுதி உடையவர் வேறு எவரும் இல்லை.

ஸ்ரீராமகிருஷ்ண முனிவர் தன் அபிமானச் சீடர் பற்றிக் கூறியது இது: ''நரேனை எடைபோட யாராலும் முடியாது. ஒருவரும் ஒருபோதும் அவனை முழுமையாகப் புரிந்து கொள்ள முடியாது''. இந்தத் துறவி விவேகானந்தர் பாரதம் தன் கூச்சம் கலந்த எல்லைகளைக் கடந்து உலகை எட்டிப்பிடிக்கும்படி செய்தார். தனக்கேற்றபடி 'உலககுரு' 'ஜகத்குரு' என்ற பணியை ஏற்றுக்கொண்டார். உலகளாவிய தெய்வீக நற்செய்தியைப் போதிக்கும் தீர்க்கதரிசியானார் சுவாமி விவேகானந்தர்.

துறவி, யோகி, புரட்சிக்காரரான விவேகானந்தர் எதிர் காலத்தில் தன்வழி தேடித்திரிபவர்கட்கு ஒரு கலங்கரை விளக்கம் ஆனார்.

# ஸ்ரீமதி இந்துமதி மித்ராவுக்கு சுவாமிஜியின் கடிதம்

பம்பாய்,
24-5-1893.

அன்புள்ள அன்னையே,

தங்கள் கடிதமும், அன்புள்ள ஹரிபாதனின் கடிதமும் கிடைத்து மகிழ்ச்சி அடைந்தேன். தங்களுக்கு அடிக்கடி கடிதம் எழுதவில்லையே என்று வருத்தப்படாதீர்கள். நான் எப்போதும் தங்கள் நலத்துக்காக இறைவனைப் பிரார்த்தித்துக் கொண்டிருக்கின்றேன். நான் இப்போது பெல்காம் செல்ல இயலாது. வரும் 31-ந்தேதி நான் அமெரிக்கா புறப்பட எல்லா ஏற்பாடுகளும் செய்து முடித்தாகி விட்டது. கடவுளின் விருப்பம் உண்டானால் என் அமெரிக்க ஐரோப்பியப் பயணங்கட்குப் பின் திரும்பி வந்து உங்களைச் சந்திக்கின்றேன். பிரபு ஸ்ரீகிருஷ்ணனின் சித்தப்படி எல்லாம் நடக்கட்டும் என்று விட்டு விடுங்கள். நாம் இறைவனின் கையில் ஆடும் பொம்மைகள் என்பதை எப்போதும் நினைவில் வைத்திருங்கள். எப்போதும் தூய்மையாக இருங்கள். தங்கள் எண்ணமோ, சொல்லோ, செயலோ தூய்மையற்றுப் போய் விடாமல் மிகக் கவனத்துடன் இருங்கள். உங்களால் இயன்றவரை பிறர்க்கு உதவி செய்ய முயற்சி செய்யுங்கள். ஒரு பெண்ணின் மிக உயர்ந்த கடமை தன் கணவருக்கு எண்ணத்தாலும், சொல்லாலும், செயலாலும் பணிவிடை செய்வதே என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். உங்களால் முடிந்தவரை அதிக தினம் கீதை படியுங்கள். தாங்கள் தங்கள் பெயரை தாஸி (வேலைக்காரி) என்று ஏன் எழுதிக் கையொப்பம் இட்டிருக்கின்றீர்கள். வைசியர்களும், சூத்திரர்களும் தாஸர் தாஸி என்று கையெழுத்திட வேண்டும்; பிராம்மணர்களும் க்ஷத்திரியர்களும் தேவர், தேவி என்று கையொப்பம் இடவேண்டும்; மேலும் இந்தமாதிரி சாதி முதலிய வேறுபாடுகள் எல்லாம் நம் நவீன தந்திரசாலி பிராம்மணர்களின் கண்டுபிடிப்புக்கள். யார் வேலைக்காரர், யாருக்கு? ஒவ்வொருவரும் பகவான் ஹரியின் வேலைக்காரரே. ஆகவே, ஒரு பெண் அவருடைய கணவரின் உபநாமத்தைப் பயன்படுத்த

வேண்டும். இது பழைய வேதகால வழக்கம். உதாரணம் இந்துமதி மித்ரா - இப்படி. அன்னையே அதிகம் எழுதத் தேவையில்லை. தங்கள் நன்மைக்கென எப்போதும் பிரார்த் தனை செய்து கொண்டிருக்கின்றேன் என்று நினைவில் வைத் துக் கொள்ளுங்கள். அமெரிக்காவிலிருந்து அங்குள்ள அற்புத மான விஷயங்கள் குறித்து அவ்வப்போது தங்களுக்குக் கடிதம் எழுதுகிறேன். இப்போது நான் பம்பாயில் இருக்கின்றேன். 31-ந் தேதி வரை இங்கிருப்பேன். கேத்ரி மன்னரின் தனிச் செயலாளர் என்னை வழி அனுப்பி வைக்க இங்கே வந்திருக் கின்றார்.

நல்வாழ்த்துக்களுடன்,

தங்கள் உண்மையுள்ள,

**விவேகானந்தர்.**

